ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

| சிலம்பு ம | மெய்கண்டான் யாண்டு-எ௱௬ மாசித் திங்கள் 1932ஆ பிப்ரவரி௴—மார்ச்சு௴ | பரல் உ |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லே னான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலே னடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கலா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீய மாட்டே
னென்செய்வான் றோன்றினே னேழை யேனே.

பதவுரை:—

குலம் பொல்லேன்=நற்குலத்தினிற் பிறவாததனாலாகிய குற்றத்தினை உடையேன்

குணம் பொல்லேன்=நற்குணத்தினைப் பொருந்தாததனாலாகிய குற்ற முடையேன்

குறியும் பொல்லேன்=வாழ்க்கையில் நற்குறிக்கோள் இல்லாமையால் ஆகிய குற்றமு முடையேன்

குற்றமே பெரிது உடையேன்=இவ்வாறு குலம் குணம் குறிகளால் மிகுதியாகக் குற்றங்களையே உடையேன்

கோலமாய நலம் பொல்லேன்=உடல் உரு அழகு இல்லாமையாலாகிய குற்ற முடையேன்

நான் பொல்லேன்=உயிர் நலமில்லாமையாலாகிய குற்றமுடையேன்

ஞானி அல்லேன்=உயிர் இறைவன் வழிப்பட்டு அதனால் உண்டாகும் மெய் அறிவு உடையே னல்லேன்

நல்லாரோடு இசைந்திலேன்=(அந்த மெய் அறிவு எனக்கு உண்டாகும் வண்ணம்) மெய் அறிவுடைய நல்லாரோடு இணங்கி ஒழுகினேன் அல்லேன்

நடுவே நின்ற விலங்கு அல்லேன்=(மேற்கண்ட குற்றங்கள் உள்ளன வாய் நான் மனிதப் பிறவியிற் பிறத்தலைப் பார்க்கினும் குற்றங்க ளென்று எண்ணப்படா திருத்தற்கு) மனிதப் பிறவிக்கும் ஏனை நாலறிவு உயிர்களுக்கும் நடுவே உள்ள ஐயறிவு விலங்குப் பிறவியிற் பிறவாமற் போனேன்

விலங்கு அலாது ஒழிந்தேன் அல்லேன்=மனிதப் பிறவியிற் பிறந்தாலும் விலங்குகளுக்கு உரிய பண்புகளை எனது அறிவினால் விடுத்தவனும் அல்லேன்

வெறுப்பனவும் மிகப் பெரிதும் பேசவல்லேன்=பிறர் வெறுக்கிற இன்னாச் சொற்களை மிக்குப் பேசும் வன்மையை உடையேன்

இலம் பொல்லேன்=(இவ்வளவு குற்றங்களுடன் ஒருவன் பிறந்தாலும் அவனுக்குச் செல்வமிருந்தால் அக்குற்றங்கள் பிறராற் கவனிக்கப் படா, அத்தகைய) செல்வம் இல்லாமையா லுண்டாகும் குற்றமும் உடையேன்

இரப்பதே ஈயமாட்டேன்=செல்வம் இல்லாமையினால் நான் பிறரிடம் பொருளை இரந்து வாங்குதல் அல்லாமல் அவருக்குக் கொடுக்க மாட்டேன்

ஏழையேன் என் செய்வான் தோன்றினேன்=(இவ்வளவு குற்றங்களையும் குறைவுகளையும் உடைய) ஏழையேனாகிய நான் உலகில் என்ன பயன் அடைதற்குப் பிறந்தேனோ தெரியவில்லை.

விளக்க உரை :—

பொல்லேன் என்ற சொல் பொல்லாப்பு அல்லது பொல்லாங்கு என்ற பண்புப் பெயரடியாகப் பிறந்த உயர்திணை ஆண்பால் தன்மை ஒருமை குறிப்பு வினைமுற்று. பொல்லாங்கு அல்லது பொல்லாப்பு என்பது குற்றம் என்னும் பொருளில் வந்தது.

அல்லேன் என்பது அன்மை என்னும் பண்புப் பெயரடியாகப் பிறந்த உயர்திணை ஆண்பால் தன்மை ஒருமை குறிப்பு வினைமுற்று.

குறி என்பது வாழ்க்கையின் குறிக்கோள் (ideal). அடிகள் 'குறிக்கோளிலாது கெட்டேன்' என்று திருக்கொண்டீச்சரம் தேவாரப் பதிகம் 'பாலனாய்க் கழிந்த நாளும்' என்ற பாட்டிற் கூறி அருளினமை காண்க.

கோலமாய—கோலம், உடல், உரு.

நலம்—அழகு.

கோலமாய நலம்—கண்டாரால் விரும்பப்படும் உடலுரு அழகு.

நான்—மேலே கோலமாய நலம் என்று உடல்நலம் குறிக்கப் பட்டபடியால் நான் என்பதற்கு உயிர்நலம் என்று பொருள் கூறப் பட்டது.

நடுவே நின்ற விலங்கு—மக்களுக்கு அடுத்துக் கீழும், ஓரளவு முதல் நான்கு அறிவு உயிர் வரை உள்ள உயிர்களுக்கு மேலும் உள்ளன விலங்குகள் ஆதலின் அவைகள் நடுவே நின்ற விலங்கு எனக் கூறப் பட்டன.

விலங்கு அலாது ஒழிந்தேன் அல்லேன்—விலங்கு என்பது விலங் குப் பண்பைக் குறிக்கின்றது.

ஒழிதல்—விடுதல்

இலம்—(பண்புப் பெயர்) வறுமை. உயர்திணை தன்மைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று அன்று.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

———

# மனைவாழ்க்கையும் புதல்வர்ப்பேறும்

[திரு. கி. குப்புசாமி முதலியார் அவர்கள்]

அஃதாவது மனைவியோடுகூடி வாழ்கின்ற வாழ்க்கையும், பிள்ளைகளைப் பெறுதலும் என்பதாம். இவ்விதம் மனைவியோடுகூடி வாழ்ந்து நிற்கின்ற நிலையை ஒருவன் எதற்குக் கொள்ளுதல் வேண்டும் என்னின், அதனைச் சிறிது ஆராய்வாம்.

உலகத்துப் பெறுதற்கரிய பிறவியாகிய மானிடப் பிறவியை யடைந்த மக்கள் அடையக்கூடிய இந்திரன் முதலாகிய தேவர்களது பதங்களையும், முடிவில்லாத இன்பத்தைத் தருகின்ற அழிவில்லாத வீட்டினையும் அடைதற்கு நூல்வல்லவர்களால் வகுத்த பொருள்கள் நான்காகும். அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாம். இந்நான்கனுள் முதல் மூன்றாகிய அறம், பொருள், இன்பங்களே வீடு எய்தற்கு வழியாகும். அம்மூன்றனுள்ளும் அறம் சிறப்புடையதாகும். அது என்னையோவெனின், இன்பம் இம்மை ஒன்றனையும், பொருள் இம்மை மறுமை இரண்டனையும், அறம் இம்மை மறுமை வீடு என்கின்ற மூன்றனையுந் தருவதனாலேயாம். இம்மூன்றனையும் இம்முறை வகுத்ததற்குக் காரணம் இச் சிறப்புடைமைபற்றியேயாம். அதுவன்றியும், பொருளை நடுவண் வைத்ததற்குக் காரணம் அப்பொருள் இல்லாவிடில் முன்னிற்கின்ற அறத்தையும், பின்னுள்ளதாகிய இன்பத்தையும் அடைதற்கு இல்லையாதலால் என்க. இதனை,

> "வடுவிலா வையத்து மன்னிய மூன்றுள்
> நடுவண தெய்த இருதலையு மெய்தும்"

என்பதனாலும் அறிதல் கூடும். இம்மூன்றையுந் தருவதாகிய அறத்தையே உயிர்கள் கடைப்பிடித்தல் வேண்டும்; அதனினும் மிக்க உபாயம் வேறொன்றுமில்லை என்பதை யறிவிக்கவே,

> "சிறப்பீனுஞ் செல்வமு மீனும் அறத்தினூங்கு
> ஆக்க மெவனோ உயிர்க்கு"

என்னும் தெய்வத் திருவாக்கு எழுந்தது. இவ்விதங்கூறிய தேவரவர்கள், "அறம் மிகப் பெரிதாயின் ஆகுக; அதை வேண்டுவார் வேண்டட்டும். எமக்கு வேண்டுவதில்லை" என்று மானுடர் மயங்கி இடர்க்கடல் வீழாவண்ணம்,

"அறத்தினூங்கு ஆக்கமு மில்லையதனை மறத்தலி
னூங்கில்லை கேடு."

என்னுந் திருக்குறளை யோதி அறத்தைச் செய்யாதான் கேட்டினை யடைவான் என்றும் வற்புறுத்தினர்.

பின்னர், அறம் என்றால் என்னை? என்பார்க்கு

"அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் நான்கு
மிழுக்கா வியன்ற தறம்"

என்று அறத்தினது இயல்பினை யெடுத்துக் கூறினர். அவ்வளவோடு நில்லாது 'யாம் இது பொழுது இளையமாகலின், இறக்குங் காலத்து அறத்தைச் செய்தல் கூடாதோ' என்று மயங்காவண்ணம்,

"அன்றறிவா மென்னாது அறஞ்செய்கமற்றது
பொன்றுங்கால் பொன்றாத்துணை"

என்று விளக்கி யருளினர்.

'இவ்விதம் அறத்தைச் செய்வோமாயின் அதனால் பயனடைவது ஒருதலை யென்பதை எதனால் நாம் அறிதல் கூடும்? இவ்வாகம அளவை பயன்தருதல் கூடுமோ? காட்சி யளவையால் அறிதல் கூடுமோ?' என்பார் ஐயத்தைத் தீர்ப்பதற்கு,

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தா னோடூர்ந்தா னிடை"

என்று கூறினர். அவ்வளவோடு நில்லாது 'சிவிகை யேறிச் செல்லுதல் கூடுமோ? அன்றிப் பிறவிப் பெருங்கடலையும் நீந்துதல் கூடுமோ?' என்று ஐயுறுவார் ஐயத்தை நீக்கும் வண்ணம்,

"வீழ்நாள் படாமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்"

என்று விரித்துக் கூறினர்.

இவ்விதம் அறத்தின் தன்மையை விரித்துக்கூறிய தேவரவர்கள், அறத்தை யாரம்பிப்பதற்கு இன்பங் காரணமாகிய இல்லறமே சிறந்தது என்பார்,

> " அறத்தான் வருவதே யின்பம் மற்றெல்லாம்
> புறத்த புகழு மில.

என்று கூறினர். இன்பம் ஒன்றைக் கருதித்தானே இல்லறம் நடாத்துவது என்னின்,

> " காமப்பகுதி கடவுளும் வரையார்
> ஏனோர் பாங்கினென்மனார் புலவர் "

என்று தொல்காப்பியப் புறத்திணையியல் சூத்திரமும் கூறுவதால், இன்பம் என்பது எவரும் விரும்பற்பாலது என்றும், அவ்வின்பத்தினையும், மனைவியோடு இருந்து ஐம்புலன்கள் ஆரத்துய்த்தல் வேண்டுமே யன்றி, பாவத்தால் வரும் பிறர்மனை நயத்தலும், பரத்தையர்ப் புணர்தலும், இழிகுல மகளிரைப் புணர்தலும் ஆகிய இவற்றால்வரும் இன்பத்தைத் துய்த்தல் கூடாதென்றும், அவ்வித இன்பம் இன்பமாகாது, துன்பமே யாகும் என்றும் எடுத்துக் காட்டியதாயிற்று. ஆதலால் மனை வாழ்க்கை யென்பது இல்லாளோடு இருந்து இன்பந்துய்த்து நிற்கும் வாழ்க்கை என்று அறிந்தோம்.

இனி, 'இம்மனை வாழ்க்கையைச் செலுத்துங்கால், உயிர்க்கு உறுதியை யடைய விரும்பிய ஒருவன் எது செய்தல் வேண்டும்? இன்பந்துய்த்தல் ஒன்றுதானே?' என்று வினவிய மாணக்கர்க்கு விடை கூறுவார் போன்று,

> " இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றி னின்ற துணை "

என்னுந் திருக்குறளை முதலாகக்கூறி உண்மையாக ஒழுகும் பிரமசரியர், வானப்பிரத்தர், துறவியர் இவர்களுக்கு அவர்கள் செல்லும் வழியில் துணையாக நிற்றல் வேண்டுமென்றும், அவ்வளவோடு நில்லாது,

> " தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
> கைம்புலத்தா றோம்பல் தலை "

என்றும் எடுத்துக்கூறி, இல்வாழ்வானுக்குச் சிறப்புடை யற மாவது, படைப்புக் காலத்து அயனால் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதியையும், தெய்வத்தையும், புதிதாக வருவோராகிய விருந்தினரையும், சுற்றத்தினரையும், தன்னையுங் காத்துக் கொள்வதே மனைவாழ்க்கை என்று எடுத்துக் காட்டினர். பிதிர ராவர்: தென்திசை யிருக்கும் ஓர் கடவுட் சாதியென்றும், தாய் தந்தையரை நோக்கிச் செய்யுங் கருமம் அவரைச் சாருகின்ற தென்றுங் கூறுகின்றனர்.

இனி, 'இவ்விதம் இன்பமனுபவிக்க எண்ணிய நமக்கு, ஐங்கலப் பாரத்தைத் தலையில் ஏற்றியதுபோல் இவ்வாசிரியர் உலகுக்குத் துணை நிற்றல் வேண்டும் என்கின்றனர். ஒருவ னுக்கு வருகின்ற பொருளை ஆறாகச் செய்து தென்புலத்தார் முதலியவர்களுக்கு ஐந்து கூறு கொடுத்தபின் ஆறாவதை அரச னுக்குக் கொடுக்க வேண்டுவதாயிற்று. இதற்கெல்லாம் பொருள் வேண்டாவோ? பொருளை யீட்டுவது அத்துணைச் சுலபமோ? எவ்விதமேனும் பொருளையீட்டி ஆசிரியர் சொல்லியவழி செய் வோம்' என்று பாவத்தால்தேடிய பொருளைப் பகுத்து உண்ணு தல் கூடாது என்று அறிவுறுத்துவார்,

"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழி யெஞ்ஞான்றும் எஞ்சலில்"

என்றனர். பின்னர் இவ்விதம் இவன் துணையாக நிற்பதற்குத் துணையாகும் வாழ்க்கைத் துணையாகிய இல்லாளிடத்து அன்பு வைக்காத விடத்து இவன் கொண்ட மனைவாழ்க்கை கடை போகாது என்றும், மேற்கூறிய பகுத்துண்டலாகிய அறத்தி னைச் செய்யாவிடின், இவன் மனைவாழ்க்கையால் அடைய நின்ற பயனாகிய இம்மை மறுமைப் பயன்களை யடைதற்கு இல்லை யென்றும் கூறுவார்,

"அன்பு மறனு முடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது"

என்றனர். இவ்வறத்தினையே தொல்காப்பியர், புறத்திணை யியலுள், "கூதிர்வேனில்" என்னுஞ் சூத்திரத்துள்,

"எட்டுவகை நுதலிய வவையத்தானுங்
கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமையானு
மிடையில் வண்புகழ்க் கொடைமையானும்
பிழைத்தோர் தாங்கும் காவலானும்
பொருளோடு புணர்ந்த பக்கத்தானு
மருளொடு புணர்ந்த வகற்சியானுங்
காம நீத்தபாலினானு மென்
றிருபாற்பட்ட வொன்பதிற்றுத் துறைத்தே."

என்று கூறினர்.

அது கிடக்க, 'எதற்காக இவ்விதம் பிறர்க்குத் துணையாக நின்று தேடிய பெரும் பொருளைப் பகுத்துக் கொடுத்து மிகுந் ததை யுண்டு உயிர் வாழ்தல் வேண்டும்? தவநெறியில் நின்று உயிர் வாழ்தல் கூடாதோ?' என்பார்க்கு, அத்தவநிலையில் உள் ளான் தன் பசியைப் பொறுத்துக் கொள்ளுந் தகுதியுடையனே யன்றிப் பிறர் பசியை நீக்கித் தன் பசியையும் ஆற்றிக்கொள் ளுந் தகுதியுடையனல்லன். அத்தகுதி யுடையான் இல்வாழ் வானே யாவான். எனவே இம் மனைவாழ்க்கையானது தவ நிலையி லொழுகுகின்ற மக்களினும் பெரியதாகுமென்பார்.

"ஆற்றி னொழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து"

என்றார். 'அவ்விதம் ஆயின் ஆகுக. முன்னர் எதற்காக இல் லறத்தைக் கொள்ளுதல் வேண்டும்? துறவறத்தைக் கொள்ளுத லாகாதோ?' என்பார்க்கு, மனத்தையும், பொறிகளையுந் துன் புறுத்தி யடக்க வேண்டிய வழியாகிய துறவறத்தைக் காட்டி லும், அவற்றைத் துன்புறுத்த வேண்டாது, ஐம்புலன்களும் இன்பங்களை யாரத்துய்க்கும் மென்மையுடைய மனைவாழ்க் கையே முதலில் தொடங்குவது நலம் என்பார்,

"அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று"

என்றனர். இவற்றை யெல்லாம் இல்வாழ்க்கையில் கூறிய தேவ ரவர்கள், 'இவ்விதம் முயன்று பலருக்குத் துணையாகி நின்ற எனது மனைவாழ்க்கையால், யான் இம்மை மறுமைகளில் அடை

யும் பயன்கள் எவை?' என்பார்க்கு இம்மையில் புகழும், மறுமையில் தேவபோகமும் என்பார்,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்"

என்று பயன் கூறினர்.

'இங்ஙனம் மனைவாழ்க்கை யிதுவென்றும், அதன் பயன் ஈதென்று முணர்ந்தோம். மனைவாழ்க்கையானது மனைவியோ டிருந்து செய்யும் அறமென்று கண்டோம் அன்றோ? அவ்வித மனைவியை எவ்வாறு அடைவது என்பதைச் சிறிது உணர்த் தல் வேண்டும்.' என்பார்க்குப் பதில் கூறுவார் போன்று 'வாழ்க்கைத்துணை நலம்' என்று ஆரம்பித்தார். வாழ்க்கைக் குத் துணையா யிருப்பதை யடைவது எவ்விதமோ வெனின், தொல்காப்பியர் கூறும் கற்பியலுள் முதற் சூத்திரமாகிய,

"கற்பெனப் படுவது கரணமொடு புணர
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியை
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"

என்றபடி, குலமும் நலமும் ஒத்தானொருவன், குலமும் நலமும் ஒத்தாள் ஒருத்தியைத் தாய், தந்தை, தன்னையர், தாயொடு பிறந்தார் முதலியோர், சுற்றத்தார் முன் ஆசிரியனால் தீயின் முன் கொடுக்கக் கொள்வதுவே வாழ்க்கைத் துணைவியை யடை யும் நெறியாகும். ஈதல்லாது வேறு முறை தொல்காப்பியர் கால முதலாக இருப்பதாகக் காணவில்லை. இதுவே உலகியல் வழக்கமுமாகும்.　　(தொடரும்)

---

* காலஞ் சென்ற

# திரு. பா. வே. மாணிக்க நாயக்கரின்

## சில வாழ்க்கைவரலாற்றுக் குறிப்புகள்

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

### பிறப்பும் கல்வியும்

கி. பி. 1871-வது ஆண்டு, பிப்ரவரிமீ 25உ வெள்ளிக் கிழமை காலை 4-40 மணிக்குச் சேலத்தில் பாகற்பட்டி வேங்கட சாமி நாயக்கரின் அருமைத் திருமகனாக திரு. மாணிக்க நாயக்கர் பிறந்தார். மாணிக்கம் என்ற பெயர் அவர் தந்தை யாரால் இடப்பட்ட தொன்றே யாகும். இளமை தொட்டே நாயக்கர் மிகுந்த சுட்டியாகவும் அரிய ஞாபக சக்தி வாய்ந்தவ ராகவு மிருந்தார். தான் மூன்று வயதுக் குழந்தையாக இருந்த பொழுது நிகழ்ந்த பல செய்திகளை அவர் வியக்கத்தக்கவாறு அடிக்கடி எடுத்துக் கூறுவதுண்டு. ஏழாவது வயதில் அவர் முதன் முதலாக "அரிச்சுவடி" கற்கத் தொடங்கினர். அவ் வாறு தொடங்கியதையும், அக்காலங்களில் நடைபெற்ற சில நிகழ்ச்சிகளையும் அவருடைய 45-வது வயதில் சேலம் ஜல கண்ட புரத்தில் 1916-ம் ஆண்டு செப்டம்பர்மீ 11-ம் நாள் அவர் நிகழ்த்திய "39 ஆண்டுகளாகக் கற்றும் கல்லாத அரிச் சுவடி" என்ற விரிவுரையில் அவரே குறிப்பிட்டிருக்கிறார்.

பன்னிரண்டாவது வயதில் அவருக்குப் பெரியதொரு "கண்ட" மிருக்கிறதெனச் சோதிடம் வல்லான் ஒருவன் கூறி யது காரணமாக அவர் அவ்வயது வரை எந்தப் பள்ளிக்கூடத் திலும் சேர்க்கப்படவில்லை போலும். பன்னிரண்டாவது வய தில் அவர் கேட்டுக் கொண்டதற் கிணங்க சேலத்திலுள்ள தொரு பள்ளிக்கூடத்தில் அவர் சேர்க்கப்பட்டார். பதினன்கா வது வயதில் தமிழிற் கவிகள் கட்டத் துவங்கினர்; பதினறுவது

---

* இஃது "ஜஸ்டிஸ்" பத்திரிகையில் வெளிவந்த ஒரு ஆங்கிலக் கட்டுரையைத் தழுவி எழுதப்பட்டது.

வயதில் சோதிட நூலில் வல்லுநரானதோடு தன்னுடைய சொந்த "ஜாதகத்தையும்" தன்னுடைய 59-ம் ஆண்டு முடிய எழுதி வைத்தார். அவர் அவ்வாறு எழுதிவைத்த "ஜாதகம்" இம்மிகூடத் தவறில்லாதப்படிச் சரியாக இருந்தது பெரியதோர் வியப்பாகும். சேலம் கல்லூரியில் அவர் எப். ஏ. என்ற பட்டம் பெற்றார். அக்கல்லூரி வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சிறு செய்தி ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாகும். உடற்கூறு நூல் (Phisiology) அவர் மிகவும் விரும்பிக் கற்ற தொன்றாகும். ஒருநாள் உடற்கூறு நூலாசிரியர் நரம்புகளைப்பற்றி வகுப்பில் உரையாடிக் கொண்டு வந்தபொழுது நாயக்கர் இடைமறித்து "ஐயனே, தாங்கள் கூறுவது சரிவர விளங்கவில்லை யாதலின், தயை கூர்ந்து பொருளைக் கண்ணிற்கு நேரே கருவிகள் மூல மாகச் செய்து காட்டி விளக்கல் வேண்டும்" என்னும் பொருள் படக் கூறினாராம். ஆசிரியருக்குத் திண்டாட்டமாகி விட்டது. நாயக்கரைச் சினந்து கடிந்தார். ஆனால் மறுநாட் காலை "ஹக்ஸ்லியின் உடற்கூறு நூல்" என்ற புத்தகத்திற் கண்டபடி மரத்துண்டுகளின் உதவிகொண்டு திரு. நாயக்கரவர்கள் தாம் குறித்துக் கேட்ட நரம்புப் பொருளைக் கண்கூடாகச் செய்து காட்டிய பொழுது ஆசிரியர் அளவிலா வியப்படைந்து நேரே கல்லூரித் தலைவரவர்களிடம் சென்று புகழ்ந்து கூறினாராம். அது கேட்ட தலைவரும் அதை நேரில் வந்து கண்டு உவமுவந்து நாயக்கரவர்களை எஞ்சினியரிங் கல்லூரியிற் சேர்ந்து மேற்கல்வி பயிலுமாறு பரிந்து கூறியதோ டமையாமல் அந்தக் கல்லூரித் தலைவர்க்கும் இதைக் குறித்துத் தானே எழுதி வேண்டியன செய்தனராம். ஆகவே மருத்துவ நூலிற் பயிற்சிபெற வேண்டு மென்ற விருப்பத்தையும் புறக்கணித்துத் திரு. நாயக்கர் எஞ்சினியரிங் கல்லூரியிற் சேர்ந்தார்.

அவ்வாண்டு எஞ்சினியரிங் கல்லூரியிற் சேர்க்கப்பட்ட எப். ஏ. பட்டம் பெற்ற மாணவர்கள் இருவரில் நாயக்கர் ஒருவர். அவ்விருவரை யொழிந்த ஏனையோ ரெல்லாம் எம். ஏ., பட்டதாரிகளும் பி. ஏ., பட்டதாரிகளுமாக விருந்தனர். அவ்வாறிருந்தும் அவ்வாண்டு நடந்த போட்டித் தேர்வில் நாயக்கர்

அவர்களே முதன்மையாகத் தேறிப் பதின்மூன்று பரிசுகளும் ஒரு பொற் பதக்கமும் பெற்றனர். இத் தேருதலால் அவர் 1896-ம் ஆண்டில் அரசாங்கத்தில் உதவி எஞ்சினியர் அலுவற் பெற்றார். எஞ்சினியரிங் கல்லூரியில் இருக்கும் பொழுது தான் திரு. நாயக்கரவர்கட்கும், திருவல்லிக்கேணியில் தற் போது வசித்து வரும் ராவ்பகதூர் டாக்டர் சி. நடேச முதலி யாரவர்கட்கும் முதன் முதலாக நட்பு உண்டாயிற்று. நாயக்க ரவர்களின் உடல் வளர்ச்சியும், முகப் பொலிவும், நாவன்மை யும், கூர்ந்த அறிவும் திரு. முதலியாரவர்களை நட்புத் தொடங் கிய நாள் முதல் இறுகப் பிணித்து விட்டன.

## இளமையில் வறுமை.

சிறப்பு வாய்ந்த ஒரு பெருங் குடியிற் பிறந்தாரேனும், நாயக்கர் பிறந்த காலத்து அக்குடியில் வறுமை மிகுந்திருந்தது. பாகற்பட்டி மிட்டாதாரவர்கள் நாயக்கரின் திறமையையும் வறுமையையும் நோக்கி அவரது பதினோராம் ஆண்டில் ஒரு "சேம்பர்ஸ் டிக்ஷனரி" புத்தகம் வாங்கிப் பரிசளித்தார். திரு. முனுசாமி நாயுடு என்பார், துறவு பூண்டு வேலை யொழித் திருந்தவர், திரு. நாயக்கரை மேலே படிக்க வைப்பது கருதி மீண்டும் வேலை யேற்று அவரை யாதரித்து வந்தார். இவ்விரு வர் செய்த நன்றியையும் மறக்காத உத்தமரான நமது நாயக்கர் அவர்களிருவரது உருவப்படங்களையும் பிற்காலத்து எழுதி வைத்துப் போற்றி வந்தனர். கல்லூரி மாணவர்களிற் பலர் அக் காலத்தில் தம்மாலான உதவியைப் புரிந்து வந்தனர். அவ்வா றிருந்தும் நாயக்கர் கல்லூரியில் வேண்டிய புத்தகங்களை வாங்கு வதற்குக்கூட முட்டுப் பட்டவராய், பிற மாணவர்களின் புத்த கங்களை வாங்கித் தன் கையேட்டுப் பிரதி யெடுத்து வாசித்து வந்தனர். நாயக்கரவர்களுக்கு இசையிலும் தையல் வேலை யிலும் இருந்த ஆர்வத்தை யுணர்ந்த ஒரு பாதிரியார் ஒரு "பிடிலும்" ஒரு தையல் நூலும் வாங்கிப் பரிசளித்தார்.

சிறுவயதி லிருந்த சுட்டித்தனத்தைக் கல்லூரியிற்கூடத் திரு. நாய்க்கர் மறந்தாரில்லை. நினைத்தபோது இருமலை வர

வழைத்துக் கொண்டு ஓயாமல் இருமும் ஒருவித ஆற்றலை நாயக்கர் படைத்திருந்தார். வகுப்பில் அவ்வாறு இருமி அடிக்கடி அவர் விடுமுறை பெறுவதுண்டு. இச் சுட்டிப் பழக்கத்தைத் தம் கல்லூரி நண்பர்கள் பலருக்கு அவர் கற்றுக் கொடுத்து விடவே ஆசிரியர்கள் ஏதோ தொத்து நோய் வகுப்பில் பரவுகின்றது போலும் என ஒரு முறை அஞ்சிவிட்டனர். பிறகு உண்மை யின்னதென அறிந்து நாயக்கரைப் பள்ளிக்கூடத்திற்குக் குறிப் பிட்ட சில நாட்கள் வரக்கூடா தென்று கல்லூரித் தலைவர் தண்டித்தபோது கல்லூரி மாணவர்களெல்லோரும் அத் தண் டனையைச் சினந்து கல்லூரிக்குச் செல்லாமல் நின்றுவிட்டனர். எனவே தலைவர் தான் விதித்த தண்டனையை மாற்றி மாணவர் களையும் நாயக்கரையும் மன்னித்து விடவேண்டிய தாயிற்று. மருத்துவக் கல்லூரிக் கண்காட்சி யொன்று அக்காலத்தில் நிறு வப்பட்ட பொழுது அக்காட்சிக்கு மருத்துவர்களும், மருத்து வக் கல்லூரி மாணவர்களுமே செல்லலாமென விதிக்கப்பட் டிருந்தும் ஒரு தந்திரஞ் செய்து நாயக்கர் தானும் தன் நண்பர் கள் பலருமாகச் செல்ல இடம் பெற்றனராம். பகலில் சூரிய னின் நிலையைக் கொண்டும், இரவில் நட்சத்திரங்களின் நிலை யைக் கொண்டும் நாயக்கர் கடிகாரத்தின் உதவியில்லாமலே எப்பொழுது வேண்டுமானாலும் ஒரு விநாடி கூடத் தவறில் லாதபடி மணியை யுய்த்துணர்ந்து சொல்லப் பழகி யிருந்தன ராம். அன்றியும் உற்று நோக்கும் அரிய ஆற்றலால் மாடு, ஆடு, குதிரை முதலியவற்றின் நரம்பு அசைவுகளைக் கொண்டே "அது கத்தப் போகிறது, ஓடப் போகிறது, குதிக்கப் போகி றது, மல மூத்திரங் கழிக்கப் போகிறது" என்று சிறிதுந் தவ றில்லாமல் முன் கூட்டியே கூறுவாராம்.

### அலுவற்றிறம்

தாம் ஏற்றுக்கொண்ட அரசாங்க அலுவலில் திரு. நாயக்க ரவர்கள் மிகவும் திறமையுடனும், ஊக்கத்துடனும், கண்டிப்புட னும் பணியாற்றி வந்தார். எஞ்சினியரிங் துறையில் அவர் பெரிய நிபுணர் என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பட்டதொன்று. அவராக அத்துறையிற் புதிதாகக் கண்டுபிடித்த

விஷயங்கள் அறுபதுக்கு மேற்பட்டன. அவைகளிற் சில உலகிலுள்ள வேறெந்நாட்டு எஞ்சினியரிங் நிபுணர்களுங் கண்டு பிடித்தவைகளைவிட மிகச் சிறந்தன வென்று கொண் டாடப்பட்டவை. "கால்க்யுலோ கிராப்" என்ற அவரது சுருக்குவழிக் கணக்கு முறை டாக்டர் W. C. அன்வின், திரு. J. M. காம்பியன், M. கார்னட் முதலிய பல மேனாட்டறி ஞர்களால் பலபடப் புகழ்ந்து பாராட்டப்பட்டது. கணக்கில் ஏற்படும் சில சிக்கலான வழிகளை அதன் மூலமாய் மிகவும் விரைவில் தீர்த்துவிட முடிந்தது. இப்பொழுது முடிவுபெற்று வரும் மேட்டூர்த் தேக்கத் திட்டத்தைப்பற்றிய கருத்தை முதன் முதலாகச் சென்னை அரசாங்கத்தார் மனத்தில் ஊன்றச் செய்தவர் திரு. நாயக்கரே யாம். என்ன இருந்து மென்? அவர் திறமையும் ஊக்கமும் அவரது முன்னேற்றத்தை ஊக்கு வதைவிடத் தடைப்படுத்தின வென்றே கூறவேண்டும். எளி தில் அரசாங்கத்தின் தலைமை எஞ்சினியர் அலுவலைப் பெற எவ்விதத்திலும் உரிமை வாய்ந்த அவர் சூப்பரின்டெண்டிங் எஞ்சினியர் அலுவலோடு விடுதிபெற வேண்டியதாயிற்று. 1896-ம் ஆண்டில் அவர் நீலகிரி உதவி எஞ்சினியராக விருந் தார். 1906-07-ல் எக்ஸிக்யூடிவ் எஞ்சினீயரானார். 1912-ல் இங்கிலாந்து சென்று ஆங்குக் "கால்க்யுலோ கிராப்" என்ற புது முறையைக் கண்டு பிடித்தார். 1915-ல் சென்னை எஞ்சினி யரிங் கல்லூரியில் ஸிவில் எஞ்சினியரிங் பேராசிரியராக நிய மனம் பெற்றார். 1919-ல் மறுபடியும் பொது மராமத்து இலா காவிற் சேர்ந்து சூப்பரின்டெண்டிங் எஞ்சினியரானார். அவ் வளவோடு அவர் அலுவல் ஏற்றம் முடிவு பெற்றது.

## ஆராய்ச்சித் திறம்

தமிழ்க் கல்வியிலும், நுணுகிய வாராய்ச்சியிலும் அவர் தாம் கையாண்ட முறையில் ஒப்புயர்வற்றவரா யிருந்தார். தமிழ் அரிச்சுவடியின் ஈடில்லா அமைப்பும் அது உலக மொழி கள் யாவற்றிற்கும் அடிப்படையா யிருக்கக்கூடிய ஆற்றல் பெற் றிருப்பதும் அவருடைய பெருஞ் சொற்களாலேயே முதன் முதல் வெளியாயின. பிரணவம் தமிழ் வடிவிற்றே என்றும்

அதுவே மற்றெல்லா மந்திரங்களையும் வரிவடிவில் உள்ளடக்கி நின்றதென்பதையும் அவர் காட்ட உணர்ந்தோர் வியந்த வியப்பை ஈண்டுக் குறிக்க வியலாது. தமிழ்மொழி நாலிலக் கணத்தை ஆராய்ச்சி வல்லுநர் யாவரும் ஒப்புமாறு முதன் முதல் வகுத்துக் கூறி மொழிப் பெருமை ஈட்டியவர் அவரே. "மொழி முதற்றமிழர் கடவுட் கொள்கை" "கம்பரின் பொய் மையும் வான்மீகியின் வாய்மையும்" முதலிய பல சிறந்த கட் டுரைகளை யெழுதித் தமிழர் அறிவை அகற்றிய பெருமான் அவ ராவர். தொல்காப்பியத்தையும் திருக்குறளையும் ஆங்கிலம் வல்லுநரில் எழுத்தெண்ணிக் கற்றவர் எவரேனும் இருந்தா ரென்றால் அது திரு. நாயக்கர் ஒருவரே யென்று துணிந்து கூறலாம்.

## இறுதி நாட்கள்

அலுவலில் விடுதி பெற்ற பிறகு உடல்நலங் கருதி அவர் பெரும்பாலும் நீலகிரிக் குன்னூரிலேயே வசிக்கவேண்டிய தாயிற்று. பார்வைக்கு எவ்விதத்திலும் உடல்நலக் கேடுற்றவ ராகத் தோற்றாதிருந்தும் அடிக்கடி இரத்தக் கொதிப்பினால் அவர் நோய்வாய்ப் பட்டிருந்ததாகத் தெரிந்தது. ஆயினும் 1931-ம் ஆண்டு டிஸம்பர்மீ 30உ வெள்ளிக் கிழமை இரவு 12-மணிக்குத் திடீரென உயிர்நீப்பார் என யாரும் எதிர் பார்க்கவில்லை. நான்கு பெண் மக்களையும் ஒரு சிறு பையனை யும், அன்பிற் சிறந்த சோதரி சுவர்ணம்மாளையும், தாயாரையும் இன்னும் நெருங்கிய உறவினர் பலரையும் விட்டுவிட்டு விண் ணுல கெய்தினர் மூதறிஞர். நண்பர்கள் நிலை குலைந்தனர்; தமிழர்கள் தட்டழிந்தனர்; நாடு நலனழிந்தது. அறிவிற் சிறந்து அணிகலமாகத் திகழ்ந்து பெரும் புகழோச்சி மறைந்த நாயக்கர் அவர்களது ஆன்மா ஆறுதல் அடைவதாக.

---

# சந்திரன்

["ரோஸா" எழுதியது]

உலக முவப்ப வெண்ணிலாப் பொழிய
அந்தரத் தெறிந்த சந்திர மணியே!
வானக வாவியில் மீன்மலர்க் குப்பையுள்
இன்றே அலர்ந்த வெண்டா மரையே
இந்திர னுலகத் திமையவர் குழவிகள்
அந்தரத் தடித்த சுந்தரப் பந்தே!
கருங்கல் மலையில் பால்மழை பொழிந்தென
இருள்மலை மீதுவெண் கதிர்மழை பொழியும்
அரும்பெறன் முகிலே யாண்டு நின்பிறப்பு
பாற்கட லகத்தே பிறந்தனை போலும்
நூற்கட லகத்தே புலவர்வாய்த் தோன்றுவை
தூரத் தடர்ந்த பனைமரத் தோப்பின்
உச்சியிற் றவழும் பச்சிளங் குழவீ!
முகிலெனு மிப்பி யீன்றவெண் முத்தே!
மதியுடை யோருனை மதியென் பாரால்
காலங் காட்டுங் கடிகை போல்வாய்
நீலங் காட்டும் வானக் கடலிடை
மா னுமி யின்றிச் செல்லுவை தனிவழி
மேகப் பாறைகள் வளியிடை யுண்டு
விண்மீன் கூட்டம் விளையாட் டயரும்
பகலவ னென்னும் பெரும்புயல் சீறுமுன்
கற்றுறை சேருதி நிசிநா யகமே.

# வள்ளுவர் வாய்மொழிக் கோடல் அல்லது புலவர் நட்பு

[திருநெல்வேலி எஸ். கணபதி B. A.]

(சிலம்பு 9, பரல் 6, 261-வது பக்கத் தொடர்ச்சி)

5. "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்"

(திருக்குறள்-துறவு. செ. 8)

"தேருங்கா
லுன்னை யொழிய வுறவில்லை யென்னுமது
தன்னை யறிவைத் தனியறிவை—முன்னம்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ ரென்று—நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள் ளுவருரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாம—லைவர்க்கு
மாவதுவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்திப்—பூவையர்தங்
கண்வலையிற் பட்டுக் கலவிக் கலைபயின்றங்
குண்மை நிலையுணர்ச்சி யோராமற்—றிண்மையினு
ளுவிற் கொடுமை பலபிதற்றி நாடோறுஞ்
சாவிற் பிறப்பிற் றலைப்பட்டிங்—காவிநிலை
நிற்கும் வகை பாராய் நிலையான நெஞ்சமே
பொற்பி னுடன்யானே புகலக்கேள்"

(கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்
நெஞ்சு விடுதூது)

6. "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

(மெய்யுணர்தல்-செ. 9)

"சார்புணர்ந்து சார்புகெட வொழுகி னென்றமையாற்
சார்புணர்த லூனே தியானமுமாஞ்—சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று"

(திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்-திருக்
களிற்றுப்படியார் செ. 34)

7. "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்"

(அவாவறுத்தல்-செ. 2)

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டி னஃதொன்றுமே வேண்டுவது—வேண்டினது
வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டுக
வேண்டாமை வேண்டுமவன் பால்"

(திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர்-திருக
களிற்றுப்படியார் செ. 40)

## திருவள்ளுவரும் அருட்பிரகாசரான சிவப்பிரகாசரும்

8. "நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்"

(கயமை-செ. 2)

"பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெருரினழுங்கி
நெஞ்ச நெக்குருகி நிற்பை நீயே
பேயேன் பெருது பெற்றூர் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலை தீர்ந்தேனே
அன்ன மாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூர னன்ப வாத லாலே
தெய்வப் புலமைத் திருவள்ளுவனர்
'நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலமில' ரெனும்
செஞ்சொற் பொருளின் றேற்றறிந் தேனே"

(நால்வர் நான்மணிமாலை-செ. 28)

9. "ஏதிலார் குற்றம்போற்றங் குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு"

(புறங்கூறுமை-செ. 10)

"நங்குற்றந் தீர்க்கும் பழமலைநாதர்க்கு நற்பலிகொண்
டங்குற்று மென்றுகில் போக்கினள் வெற்றரையாகி யந்தோ
விங்குற்றனையென வெம்பெருமா னிவ்விருநிலத்திற்
றங்குற்றம் பார்க்கு மவருளரோவெனத் தாழ்ந்தனளே"

(பழமலைநாதர் பிக்ஷாடன நவமணிமாலை-செ. 1)

10. "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

(அறன்வலி யுறுத்தல்-செ. 7)

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தானிடை"யை—மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து"

(நால்வர் நான்மணிமாலை-செ. 33)

11. "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக் கேட்டதாய்"

(புதல்வரைப் பெறுதல்-செ. 9)

"ஆன்றமயல் செய்கையோகத் தன்றித் தவயோகத்தினா
லீன்ற பொழுதிற் றன்மகனை யிருந்து சான்றோனெனக் கேட்டுத்
தோன்று முவகைக் கடற்படிந்தாள் சுஞ்ஞானித்தாய் பசும்
[பொன்மலை
போன்று வளர்ந்து மருங்குன்மிடி போக்கவறியா விளமுலையாய்"

(பிரபுலிங்கலீலை-விமலைகதி-செ. 36)

12. "அமிழ்தினு மாற்ற வினிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்"

"மக்கண் மெய்தீண்ட லுடற் கின்பமற்றவர்
சொற் கேட்டலின்பஞ் செவிக்கு"

"குழலினிதி யாழினி தென்பதம் மக்கண்
மழலைச் சொற் கேளாதவர்"

(புதல்வரைப் பெறுதல்-செ. 4, 5, 6)

"குழலும் யாழுமினிய வெனக்கூறுவண்ணமென் கனிவாய்
மழலை மொழிந்து முடற்கின்ப மருவவோடிமேல் விழுந்தும்
விழையு மமிழ்தின் மிகவினிமை விளையநுகருஞ் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்துஞ் செய்தாண்மோக மீன்றோரை"

(பிரபுலிங்கலீலை-மாயையினுற்பத்திகதி-செ. 52)

13. "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரு மிந்நோய்"

(பொழுது கண்டிரங்கல்-செ. 7)

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாயிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பொருமை லொருமாலை நாமமணிவல்லி
மூலையிருந்து புறம்போந்து விரிவெண்ணிலா மென்முற்றத்திற்
பீலிமஞ்ஞை யெனவீழ்ந்து மதநோய் மிகவாய் பிதற்றுமால்"

(பிரபுலிங்கலீலை-பிரபு தேவர் வந்தகதி-செ. 56)

"கூடினர் பானிழலாய்க் கூடாதார்பால் வெய்யதாய்க்
காவலன் வெண்குடைபோற் காட்டிற்றே—கூடிய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போத விழ்க்குங் கங்குற்பொழுது"

(சிலப்பதிகாரம்-4-அந்திமாலைச் சிறப்புச் செய்
காதை-இறுதி வெண்பா)

## திருக்குறட்பா வள்ளுவரும் திருவருட்பா வள்ளலாரும்

14. "கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று"

(நிலையாமை-செ. 2)

"ஆய்ந்தோர்சொல்
கூத்தாட்டவை சேர்குழாம் விளிந்தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறண்மொழியுந் தேர்ந்திலையே"

(திருவருட்பா-நெஞ்சறிவுறுத்தல்-செ. 411)

15. "செல்லாவிடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீயபிற"

16. "தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்"

(வெகுளாமை-செ. 2, 5)

17. "அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை"

(பொறை யுடைமை-செ. 1)

"தாபமுறச்
செல்லாவிடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீயதென்ற தெண்ணிலையே—மல்லல்பெறத்
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க வென்றதனைப்

பொன்னைப்போற் போற்றிப் புகழ்ந்திலையே—துன்னி
அகழ்வாரைத் தாங்கு நிலம்போல வென்னுந்
திகழ் வாய்மையு நீ தெளியா ''

(நெஞ்சறி வுறுத்தல்-செ. 433,434,435)

18. "நெருநலுள னொருவனின்றில்லை யென்னும்
பெருமை யுடைத் திவ்வுலகு ''

19. " உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு ''

(நிலையாமை-செ. 6,9)

" உறங்குவது போலுமென்ற வொண்குறளின் வாய்மை
மறங்கருதி யந்தோ மறந்தாய்—கறங்கின்
நெருநலுள னொருவ னென்னு நெடுஞ்சொன்
மருவுங் குறட்பா மறந்தாய் ''

(நெஞ்சறி வுறுத்தல்-செ. 466, 467)

20. " பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு ''

(துறவு-செ. 10)

" பற்றற்றான் பற்றினையே பற்றியிடல் வேண்டுமெது
பற்றற்றா லன்றிப் பலியாதால் ''

(நெஞ்சறி வுறுத்தல்-செ. 624)

---

# கல்வியும் ஆராய்ச்சியும்

[திரு. வி. அ. நடேசனவர்கள்]

" கல்லாதார் மனத்தணுகாக் கடவுள்தன்னைக்
　　கற்றார்கள் உற்றோருங் காதலானைப்
பொல்லாத நெறியுகந்தார் புரங்கள்மூன்றும்
　　பொன்றிவிழ அன்றுபொரு சரந்தொட்டானை
வில்லாத நிணக்குரம்பைப் பிணக்கம்நீங்க
　　நிறைதவத்தை அடியேற்கு நிறைவித்தாங்கே
செல்லாத செந்நெறிக்கே செல்விப்பானைச்
　　செங்காட்டங் குடியதனிற் கண்டேன்நானே ''

—அப்பர் தேவாரம்.

கல்வி யென்பதைப்பற்றிப் பேசுவதற்குமுன் அதனோடு தொடர்புடைய சில சொற்கள் என்மனதில் நிகழ்கின்றன. அவை, உலகம், உயிர், கடவுள், ஆகிய முப்பொருளும் அவைகள் என்னிலையன என்பனவுமாம். உலகம், அறியாதது (சடம்), கடவுள், அறிவுடையது (ஞானம்), உயிர், அறிவு அறியாமை கூடியது (சடசத்). உலகம் அறியாமை யுடையதாகையால் அதை யறிவிக்க முடியாததோடு அதுவும் அறியாது. உயிர் அறியாமைனின்றும் நீங்கி முழு அறிவை அடையவேண்டுவது இன்றியமையாததாகும். அதை முழு அறிவையுடைய கடவுளினிடம் பெறவேண்டும். உலகத்தையும் (சடத்தையும்) உயிரையும் (சடசத்தையும்) கடந்தவன் கடவுள் ஆகையால் கடந்த பொருளை அறிய வேண்டுவதவசியம் என்பது போதரும். இவ்வுயிர் முதலில் அறியாமை யுடையதாய் அறியாமையால் அறிவு மழுங்கி துக்கத்தில் மூழ்கி துன்ப மயமாய் இருந்தது. இந்நிலையை நூலில் (சாத்திரங்களில்) கேவல நிலை எனக் கூறுவர். இறைவன் உயிர்கள் இந்நிலையினின்றும் நீங்க அறிவு சிறிது விளக்கம்வர இன்பமும் துன்பமும் கலந்து அடைய உயிர்களிடத்தில் வைத்த உயர்ந்த அருளால், உடம்பையும் கரணங்களையும் உலகத்தையும் போகங்களையும் உயிர்களுக்கு உதவினான். உடம்பையும், உலகத்தையும், போகங்களையும், கரணங்களையும் அடைந்து அதனால் அறிவால் இன்பங்களையும், அறியாமையால் துன்பங்களையும் அடைகின்ற உயிர்களின் இந்நிலையை சாத்திரங்களில் சகல நிலை எனக் கூறுவர். இந்நிலை யடைந்திருக்கிற உயிர்களாகிய நாம் அறியாமையால் வருவது துன்பம், அறிவால் வருவது இன்பம் என்றுணர்ந்து அறியாமை நீங்கமுற்படுவது நமது கடமையாகும். எவ்விடத்தில் துன்பங் காணப்படுகிறதோ அவ்விடம் அறியாமை கூடிய இடம். எவ்விடத்தில் இன்பங் காணப்படுகிறதோ அவ்விடம் அறிவு விளக்கமடைந்த இடம். எனவே அறிவு மழுங்கிய நிலையினின்றும் நீங்கி விளக்கமடைவதற்குரிய வழியை முறையாக அறிந்துகொள்ள வேண்டியது மக்களாகப் பிறந்த உயிர்களாகிய நமது கடமையாகும். ஏன் மக்கள் கடமையாகும் என்பது

என்றால், உயிர்கள் வேறு உடலொடு பிறந்து பிறந்து அறிவு விளக்கமுற்ற நிலையில் இம்மனித உடலை இறைவன் இவ்வுயிர் கட்கு உதவுகிறான். இக்கருத்தை ஆசிரியர் தொல்காப்பியனார் 'மக்கள் தாமே ஆறறி வுயிரே' என்று கூறி அதற்குமேல் கூறாது அதனோடு நின்றமையாற் காண்க. எனவே அறிவு விளக் கம் பெறுதற்கும் அதனால் இன்பப்பேற்றை அடைதற்கும் உறு துணை உயிர்கட்கு இம்மனித உடல் ஆகும். இம்மனித உட லெடுத்தும் அறிவு விளக்கம் பெறாது மழுங்கி அறியாமையாற் றுன்புறும் மக்களைத் தொல்காப்பியனார் 'மாவும் மாக்களும் ஐயறிவினவே' என்று பிரித்து விளக்கினார். அதனால் விளக்கம் பெறா அறிவினையுடைய மக்களும் மாக்களாய் அஃறிணையாவர் என்பார் நம் பொய்யாமொழியாரும். 'மக்களே போல்வர் கய வர்' என்றதும் இக்கருத்தே யென்க.

இதை இதனொடு விடுத்து அறிவு விளக்கம் பெற்று முடி விலா துன்பங்கலவா, குறையா இன்பம் பெறுதற்கே இறைவன் இவ்வுயிர்கட்கு மனித உடலைக் கொடுத்தான் என்று முடிவாகக் கூறி மேலே செல்லுகிறேன். அத்தகைய உடலைப்பெற்ற உயிர் அறிவானும் இன்பம் பெறுதற்கு உறுதுணை செய்வது கல்வி, கல்வியே யாம். கல்வி யென்ற சொற்குப் பொருளென்னை? தோண்டுதல், கல்லுதல்; எதை? அறிவை அறியாமையி னின் றும் பிரித்துத் தோண்டுதல் என்க. எனவே அறிவு விளக்கம் பெறுதற்கும், தனித்து விளங்குதற்கும் துணை செய்வது என் னும் பொருளை யுடையதாகும் கல்வி என்னும் சொல். அறிவு மழுங்குதற்கும் அறியாமையோடு கலப்பதற்கும் துணை செய் வன கல்வியாகா. எனவே இன்பப் பேற்றிற்குக் காரணமாய அறிவை விளக்குவது ஏதாயினும் அது கல்வியே என்க.

இனி, கற்றோமெனப் பெயர் கூறித் தனனையும் மறந்து தனக்கு இவ்வரும் பெறலுதவியை யீந்த ஆண்டவனையும் மறந்து அறியாமையில் மூழ்கித் துன்பத்தை இன்பமெனக் கருதித் திரியும் மாந்தர் பலரை இக்காலத்தில் எங்கும் காண லாம். இக்கல்வியைக் கல்வியென நம் பண்டைத் தமிழர்கள்

கொண்டிலர்; 'நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்' என்று இழித்துக் கூறிப் போந்தனர். கல்வியின் பெருமை யென்னே! கல்வி எவ்வாறு இருக்கவேண்டும் என்று கண்டார்கள் நம் தமிழர்கள்? தமிழ்த் தாய்க்குக் கொழுகொம்புதவிய நம் பொய்யா மொழியார்,

> " கற்ற தனாலாய பயனென்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅ ரெனின்"

என்றார்.

இக்குறளைக் கடவுள் வாழ்த்தில் வைத்ததும், கல்வி என்ற அதிகாரத்தில் வையாததும், இறைவனை வாலறிவன் என்று விளித்ததும் 'கற்றதனாலாய பயன்' எனக் கூறியதும் என் சொற்களுக்குத் துணை செய்தலைக் காண்க. கல்வி அறிவை விளக்கி ஆண்டவனிடத்தில் சேர்க்கிறது. கல்வியின் உறுதுணை யென்னே! கல்வியின் இன்பம் என்னே! கல்வியின் பெருமை யென்னே! நம் சாத்திரங்களில் நாத தத்துவம் என்றொரு தத்துவம் கூறப்படுகிறது. அதன் செயலைப்பற்றி ஈண்டு ஆராய வேண்டுவதில்லை. ஆயினும் நாத தத்துவத்தின் இறுதியில் இறைவன் இருக்கிறான் என்பது உண்மை. ஆறு அந்தங்களுள் நாதாந்தம் என்பது ஒன்று. நாதத்தை இறை உண்டாக்கு கிறான். அக்கருத்தை 'பருமிக்க நாதப் பறை' என்றும் 'நாதப் பறையினர்' 'நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்' என்றும் நம் வாதவூரடிகள் கூறியதிற் காண்க. அந்த நாத மயமான வேதத்தையும் இறைவன் கூறினான் என்றும், அவன் உண்டாக் கிய நாதத்தில் உண்டான பிரணவப் பொருளே வேதம் என் றும், அப்பிரணவமே கலைகளுக்கெல்லாம் ஆதி காரணம் என் றும் கூறுகின்ற சாத்திர முறைமையும் பொருத்தமுற இருத் தல் காண்க. இதை நீண்டுகூற இடமின்மையின் கல்வி யென் பது இறைவனை யறிதற்கு உறுதுணை செய்வது என்றும், இறை வனை அறிவிப்பதென்றும், நாதமயமாக உள்ளதென்றும் கூறி னேன். அதை ஆராய வேண்டுவ தெப்படி என்று இனிக் கூறு வேன்.

ஆராயவேண்டுவதைக் கூறுமுன் ஆராய்ச்சியாவது யாது

என்று இரண்டொரு சொற்கள் சொல்லவேண்டும். இக்காலத் தில் ஆராய்ச்சியானது மிகுதிப் பட்டுவிட்டது. இவ்வாராய்ச்சி யில் உண்மைக்கு மாறுனவைகளும் உண்மைபோலப் புலப்படும் படிக் கூறலாம் ஆராய்ச்சித் திறனுலும் வாக்குக்கள் உண்மை யாலும்; ஆயினும் ஆராய்ச்சியானது ஆன்றோர்களுடைய கருத்துக்கு மாறுபடாததாய் அவ்வாராய்ச்சியால் உயிர்க்கு உறு துணை நிகழ்வதாய் இருக்குமேல் அது கொள்ளற்பாலது மற்றது தள்ளற்பாலது. அவ்வாராய்ச்சியும் எங்கும் பயன்படாது. உறுதிகொண்டு ஒழுகும் மகனுக்கு ஆராய்ச்சி முற்றும் பய னின்றி ஒழியும்.

நம்பிக்கையால் பெறும் பேற்றினும் கல்வி யாராய்ச்சியால் பெறும் பேறு குறைவுதான். ஆயினும் ஆராய்ச்சி யுடையான் அறிந்து அனுபவிப்பன், அவன் அறியாது கழிப்பன். இது தான் வேற்றுமை. இம்முறை யன்றி மாறுபட்ட ஆராய்ச்சியும் பயனற்ற ஆராய்ச்சியும், உலகத்துக்கும், உயிர்க்கும், சமயத் துக்கும், தமிழுக்கும் கெடுதியை விளைப்பன ஆகும். எனவே அம்முறைபற்றி ஆராயவேண்டும் என்று ஆராய்ச்சி யுலகத்தை வேண்டுகிறேன். நம் தமிழர்கள் எம்முறையில் தமிழை ஆராய்ந்தார்கள் என்றுல் இறைவன் இன்பத்துக்கு அடுத்த முறையில் வைத்து அவ்வின்பத்துக்குச் சமமாகக் கூறும் முறை யில் ஆராய்ந்தார்கள். வேறு அவர்கள் அறியார்கள். எங்குக் கண்டாலும் தமிழ் மக்களுக்குச் சமயக்கண்ணே யன்றி வேறல்ல. தமிழ் நூல்களுள் சமயம் ஒழிந்த நூல்கள் இல்லையென்றுங் கூறலாம். நீதி நூல்களும், பொருள் நூல்களும், இன்ப நூல் களுங்கூட நம் தமிழ் நாட்டில் சமயச் சார்பாகவும், கடவுள் வாழ்த்துப் பெற்றதாகவும் இருக்கின்றன. இந்நிலை வேறு எந்த எந்த மொழியிலும் செம்மை பெற்றிருக்காது. நம் தமி ழர்கள் எப்பொருளை ஆராய்ந்தாலும் இறைவனை மறவாத கடமை யுடையவர்கள் என்பது இதனின்றும் போந்த உண்மை. எச்செயலும் இறைவன் செயலென் றிருந்தவர்கள் என்பதும் அதன் கருத்து. இறைவன் அருள்வழிப்பட்டவர்கள் நம் தமி ழர்கள் என்பது அதன் உட்கிடக்கை.

கல்வி யாராய்ச்சியானது இன்பத்துக்குக் காரணமாய் இருக்கவேண்டும். அவ்வழியில் நின்று இன்பம் பெற்றவர்கள் நம் தமிழர்கள். அம்முறை பிறழா நோன்பினர்களாயினமை யாற்றான் நூல்களும் அதன் கருத்துக்களும் சமய மொழிந்து நிற்காதிருக்கின்றன என்று மேலே கூறினேன். அவ்வாறு கூறிய பெரியோர்களுடைய கருத்துக்கள் இடச் சுருக்கத்திற்கேற்ப இரண்டொன்று கூறி இவ்வியாசத்தை முடிக்கிறேன்.

கம்பன் எனப்படுவோன் தான் கூறிய நகரச் சிறப்பில் முடிவாக இன்பமுடைய தந்நாடு என்றான். எதனால் இன்பமுண்டாயிற் றெனில்? மற்றையவையால் உண்டாகும் இன்பம் அழிந்து போவன குறைந்தன துன்பங் கலந்தன. கல்வியால் உண்டாகும் இன்பம் இறைவன் அருளைக் கூட்டுதற்குக் கருவியாகலின் அம்முறையில் கல்வியானுய இன்பம் அந்நகரத்தில் நிலைத்தது என்று கூறி முடித்தான். அச் செய்யுளாவது:

‘ஏகம்முதற் கல்விமுளைத் தெழுந்து எண்ணில் கேள்வி
ஆகம்முதற் றிண்பணை போக்கி அருந்தவத்தின்
சாகந்தழைத்து அன்பரும்பித் தருமம் மலர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலு மன்றே’

கம்பர் நகரப்படலம் 75.

இனி எங்கள் நற்றவப் புலவராம் மாணிக்கவாசகர் கல்வியின் இன்பம் இறைவன் இன்பத்திற் கடுத்தது ஆகையாற்றான் கல்வியைக் கடவுளாகவும் கடவுள்மயம் என்றும் உபசாரமாகக் கூறுகிறார்கள் என்பதை தெளிவாகக் கூறியுள்ளார்கள். அவற்றுள் ஒன்றிரண்டு வருமாறு:—

‘உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே’

—திருவாசகம்.

இத் திருப்பாடலில் கற்றாரை யான் வேண்டேன் கற்பனவும் இனியமையும் என்று கூறி அடுத்து நின் திருவடியாற் பெறும் பேறு பெற்றிருக்க வேண்டுவன் என்று கூறியிருத்தலின்

உண்மையறிந்து கொள்க இஃது உண்மை வாக்கானமையின். உற்றார், ஊர், பேர் (புகழ்) இவை ஒன்றற்கொன்று சிறப்புடைமையும் உணர்க.

இனி, சேக்கிழார் பெருமான் கல்வியின் பயன் சிவன் கழலிற் செறிவு, அவ்வுரிமை ஆண் பெண் இருபாலார்க்கும் உரியது என்று திருக்குறளை விளக்குவார் போன்று கூறும் மொழிகள் வருமாறு: (திருக்குறளை விளக்குவதாவது 'தொழார் எனின்' என்றதில் தொழார் என்பதற்கு பலர்பால் ஆண் பெண் பொது என்று கொண்டு ஆண் ஒருவற்கும் பெண் ஒருத்திக்குங் கூடிய),

"உள்ள நிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால்
தெள்ளி வடித்தறிந்த பொருள் சிவன்கழலிற் செறிவு"

பெரியபுராணம்—சிறுத்தொண் 4.

இத்திருப்பாட்டில் சிவன் என்றதும் கழல் என்றதும் என் கூற்றுக்களுக்குத்துணை செய்வனஆகும். இங்கு சிறுத்தொண்டராம் ஆண்பாற்குக் கூறி பின்னால்,

புனிதவதியார் என்னும் காரைக்காலம்மையார் தாங்கள் இளமையில் கல்விபயின்றார்கள் என்று கூறுவார் எவ்வாறு கூறினார் நம் அருள்மொழித் தேவர் எனில்,

'பணியணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்
தணிவில் பெருமனக்காதல் ததும்ப வருமொழி பயின்றார்'

என்று கூறினார்.　　பெரியபுராணம் — காரைக்கா 3.

இத்திருப்பாடலிலும் கழற்கடிமை என்பது கருதற்பாலது.

எனவே கல்வியானது இறைவனின் அறிவுமயமான உருவை அடைந்து அனுபவிக்கவும் அறிவைப் பெறவும் துணை செய்யவேண்டும் என்பதும் ஆராய்ச்சியும் அதற்குத் துணை செய்வதாய் இருக்க வேண்டுமே யொழிய மாறுபடக் கூடாதென்பதும் மாறுபட்டவை பயனில என்பதும் அவ்வாறு நம்

பண்டைத் தமிழ்மக்கள் பயின்று ஆராய்ந்தார்கள் என்பதும் இனிது பெறப்பட்டதாகும்.

'புன்னெறியதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி யொழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
என்னையும் அடியனாக்கி இருவினை நீக்கியாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங்கயங்கள் போற்றி.

---

# ஒருவருக்கொருவர் உதவி செய்தல் வேண்டுமா?

[அவிநாசி ஸ்ரீமத் கருணாலய சுவாமிகள்]

ஒருவர்க்கொருவர் உதவி செய்தல் வேண்டுமா என்ற கேள்வியை வெகு நுட்பமாக ஆராய்ந்தே வேண்டும் வேண்டாம் என்று ஒரு முடிவு கூறுதல் வேண்டும். அறிவிற் சிறந்த நன்மக்கள் தாம் செய்ய வேண்டிய கடமைகள் பலவற்றுள்ளும் முதன்மையாக வைத்து ஒருவர்க்கொருவர் உதவி செய்தல் வேண்டும் என்னும் பொருளை மிகவும் வலியுறுத்தி உறுதி நூற் புலவர்கள் பலரும் கூறுகின்றமையாலும், நமது ஆராய்ச்சி அனுபவங்களுக்கு அவை ஒத்திருத்தலாலும் உதவி செய்தல் வேண்டாம் என்றபோது அவன் பெரும் தவறிழைத்தவனாக வைத்தெண்ணப்படுதலாலும், வேண்டாம் என்று கூறின் தவறிழைத்தவனாக நேரும் என்றஞ்சியும், ஒருவர்க்கொருவர் உதவி கொண்டே எத்துணை நலங்களும் நடைபெற வேண்டியிருத்தலாலும், அவைகள் பெரும்புகழும் புண்ணியமும் உடைத்தாயிருத்தலாலும் வேண்டுமென்பதையே ஆராய்ந்த முடிபாகக் கொள்ளல் வேண்டும்.

அருமணிக் கடல்புடை சூழ்ந்த இந்நிலவுலகின்கண் எல்லாம்வல்ல இறைவன் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில் புரியும் ஐயன் அருள் நலத்தால் இம்மை மறுமைப் பலன்களை இனிது அடைந்து இன்

புறம் இன்னுயிர்த் தொகுதிகள் பலவாகும் எனினும் இறைவன் தன் கருணை நலத்தால் இம்மை மறுமை நலன்களைத் திருவருள் பாலிக்கின்றான் என்று ஒரு பகுதியினரும்;

அவ்வவ்வுயிர்கள் செய்துள உதவிப்பயன்களுக்குத் தக்கபடி இன்ப துன்பங்களை இறைவன் அருள்புரிகின்றான் என்று ஒரு பகுதியினரும் உறுதி கூறுகின்றமையானும்;

பரமகருணா மூர்த்தியாய் இமையளவும் உபகாரம் அல்லாத ஒன்றை இயக்காத நிர்க்குணக்கடலான நம்பெருமானும் தாமாக உதவாமல் உயிர்கள் அன்போடும் அருளோடும் ஒருவர்க்கொருவர் செய்துள்ள உதவியை நல்ல பலனாகவும் மிகுதியும் தொகுத்து வைத்து ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்து நின்று ஊட்டுகின்றான் என்றும் உறுதி நூல்கள் கூறுகின்றமையானும்;

இவ்வருமை வாய்ந்த மக்கட் பிறப்பில் ஒருவர்க்கொருவர் செய்யும் உதவியே இகபோக சுகமும் மறுமை இன்பமும் ஆகிய இருவகை இன்பங்களின் நலத்தைத் தந்து மகிழ்வூட்டுந் தகுதியுடையது என்றும இவ்வாச்சரியத்தைக் குறித்துச் சைவ சமய சாத்திரங்களும் பன்னிரு திருமுறைகளும் முற்பட்ட சங்க நூற்புலவர்களும் பெரிதும் பாராட்டி வற்புறுத்திக் கூறுகின்றமையானும் ஒருவர்க்கொருவர் உதவி செய்தல் வேண்டும் என்பது இனிது விளங்குகின்றது.

அவ்வுதவி தானும் யாருக்கு யார் செய்வது? அது எப்போது செய்வது? செய்யும் உதவிகள் ஒன்று பலவா என்பதை உற்று நோக்குங்கால் உதவி செய்யும் தகுதியுடையாரும் பலராவார்கள், உதவிகளும் பலவாகும், அவற்றைப் பெற்றுக்கொள்ளத் தக்காரும் பல தகுதியுடையவராகவே ஆவார்கள் என்பதே புலனாகும். யாதொரு பொருள் தன்னிடத்துண்டோ அதனை மற்றவர்கள் விரும்பி வந்தபோது அக்குறிப்பறிந்து மனமுவந்து ஈதலே முதன்மையான உதவி யெனப்படும்.

குறிப்பறிந் தீதலே கொடைமற் றின்றென
மறுத்தலே கேட்டபின் வழங்க லாதலிற்

பெறற்கரு மாவியும் பெட்பி னீகுவன்
திறப்பட விவருளம் தெரிந்த தில்லையால்

என்றும், அவ்வித உதவிதானும் முதலிடைகடையென மூவ வகைப்படுமென்பதை

என்னுனு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுஞ்
தன்னுன் முடிவதெனிற் றனே முடித்தறலே
சொன்னுன் முடித்தலிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னுண் மறுத்துப்புரிதல் கடைப் பான்மையதே.

என்றும், இன்னும் தக்கார் தகாதார் என்பதை ஈண்டு

முகனெதி ரொன்றும் பிரியின் மற்றென்று மொழிபவர்
[விழைவுறுனுத
ரகன்ற கேள்வியிலா ரருமருத்துவர்க ளரும்பொருள் கவருநர் தூர்ததர்
புகலருந்தீமை புரிபவர்மல்லர் செருக்கினர் புன்றெழிற்றீயோ
ரிகழ்தருமிளையோ ரொன்பது பெயர்க்கு மீந்திடல் பழுதென
[விசைப்பார்.

என்றும், தக்கார் இன்னர் என்பதை

மாண்புடையாளர் கேண்மையர் தத்தம் வழிமுறை யொழுக்கினி
[லமர்ந்தோர்
சேண்படு நிரப்பி னெய்தினேர் புறப்போர்த் தீர்ந்தவர் தந்தைதாய்
[குரவர்
காண்டகு முதவிபுரிந்துளோ ரினையோ ரொன்பதின் மருமுளம் களிப்ப
வேண்டுறு நிதியமளிப்பின் மற்றென்றே கோடியாமெனமறை
[விளம்பும்

முற்றெடர் பிற்செய்த முறைமையால் வந்தசெல்வ
மிற்றை நாட்பெற் றேமென் றெண்ணுது பாழ்மனமே
யற்றவர்க்கு மீயாமலரன் பூசை யோராமற்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறைந்து விட்டனையே

எனப் பட்டினத்தடிகளும் கூறியிருத்தல் காண்க. இன்னும் உதவியின் மாட்சியைப்பற்றி

சாதல்வந் தடுத்த காலுந் தனக்கொரு சாதலின்றிப்
பூதலமிருக்குங் காறும் புகழுடம் பிருக்குமந்தக்
கோதறு புகழின்யாக்கை கொடையினற் செல்வங்கூர
வாழ்தலை யுடையா ரன்றே வானமும் வணங்கும் நீரார்.

என்பதுங் காண்க. இன்னும் நமது நாட்டில் உயர்குடிப் பிறந்த பெருமக்கட்கே உதவி செய்யும் அருங்குணம் அமையும் என்றும் அதற்கிணங்க பற்பல பெருஞ் செல்வர்களும் தெய்வச் செந்தமிழ் மன்னர்களும் தக்கார்க்கு

உற்றுழி உதவி செய்வார் உலப்பிலா தெவையுமீவார்
மற்றொரு பொருளும் வெஃகார் வருத்தமு மோராராவி
இற்றிடவரினு மெண்ணுர் இனிதென மகிழ்வரன்றே.

அதனினும் சிறந்த செல்வப்பேருடைய அரசர் பெருமக்கள் பலரும் உதவி செய்யும் நிலையினைக் கடைப்பிடித்துத் தனக்கு இனிமையாக மிகவும் விருப்பப்படுகின்ற எப்பொருளாயி னும் அதனை பிறர் இலம்பாட்டால் விரும்புவார்களானல் உடல் பொருள் ஆவி முப்பொருளையும் மனமுவந்தளித்து இன்புற்ற சரிதங்கள் எண்ணிறந்தனவாகும். உதாரணமாக

கொங்கு நாட்டில் குமணபுரியில் அரசு புரிந்து வந்த குமண வள்ளல் கற்றூர்க்கும் மற்றூர்க்கும் மனமுவந்து செய்யும் உதவியினைக்கண்டு மனம் பொருத அவ்வள்ளலின் தம்பியார் கூறியதாவது.

குணத்தொடு குலமுமொழுக்கமும் படிப்புங் கொண்டிலனுயினு மிகுந்த
பணத்தொடு மிருப்பி னுலகின ரவனைப் பண்பொடு முயர்த்தி
[யேத்தெடுப்பார்
மணத்தொடு வந்த மங்கையுமிழித்து வைகுவான் மற்றதில்லானைப்
பிணத்தொடு சரியாய் நினைப்பரேனையர்ரிப் பெற்றியை யறிந்திலா
[ரெவரே.

மதியுளார் நல்வலியுளா ராயினு
நிதியிலாதவர் நீணகர் வாழ்தலிற்
கதியினர் மிருகங்களி லங்குகான்
வதிதலே மிகுமாண்புடைத் தாகுமால்.
ஆதலா லிஃதறிவிற் கொளாதுநீ
ஈதலேமிக வின்னலைத் தந்திடும்
ஓதுசெல்வ மொழிந்திடும் பின்னர்வே
றேதுகொண்டர சிப்புவியிற் செய்வாய்

இவ்வாறு கூறிய தம்பியைப் பார்த்து குமணவள்ளல் கூறுவ தாவது.

கோடிபொன்ன டைந்தாலில்லவர்க் கீந்து குறிப்பொடு நல்லறம்
[புரிந்து
நாடியசுற்றத்த வருடனுண்டு நன்மதிப்படைந்து வாழ்பவன்மேல்
வீடுமுற்றிடு வானிவையியற்ரு தோன் மேதகுவாழ்க ரம்பிடித்த
பேடியை நிகர்ப்பானல்லனு மணிர்த பிணத்தினை நிகர்சொலப்
[பெறுவான்.
அடுத்தபொன்னிரங் தோற்கீந்திடிற் பின்னரடுத் திடும்பிறப்பினிற்
[பலவா
மடுத்து மேம்படுத்து மின்னதை யுலகமாட்டு நன்னிதிபடைத்த
[வரைக்
கொடுத்து வைத்திருந்த புண்ணியரென்னுக் கூறுமோர் மொழிநில
[நிறுத்தும்
எடுத்தளித் தறியாரெவரவர் பிச்சை யெடுத்தழிந்தினை பவரிங்ஙன்.

முன்னைய பிறப்பி லறம்பல புரிந்த முறைமையாலுயர் பெருஞ்சிறப்பின்
மன்னிய மனித்தரிங்கு மவ்வாறே மனத்தொடு நல்லறம் புரிந்தால்
பின்னரு மிவ்வாறுயர் நலம்பெறுவார் பேதமையான் மறந்தனரேல்
என்ன பாழ்ஞ்சனன மெடுப்பரோ விதனை யெண்ணலு
நடுங்குமென்னிதயம்

ஈதலெனு நற்குண மொன்றிசைந்தவர் பாலெவ்வகைய
தீதுபெறுங்குண முறினுஞ் செஞ்சுடர்முற் பனிபோலாம்
ஆதலினுன் மானிடர்க்கு மமரருக்கு மியாவருக்கும்
மேதினியிற் கொடைநிகரா விளங்குதுணை வேறிலையால்.
இல்லறஞ் செய்யில்லவளு மேனையரு மிருநிதியும்
நல்லரசும் வளநாடும் நமனுர் கைப்படும்பொழுது
புல்லுமொரு துணையாகப் பொருந்துவரோ வறமொன்றே
வல்லதுணையா யிருந்து வாட்டமுறன் மாற்றிமொல்.
இகத்தினன் கொடைப்பெருமையை யறிந்து ளோரில்லென்
றகத்திஞமமு முறை செயாரவரரிதாகத்
தொகுத்தவோர் பொருணல் குவரென்ப தென்றுணிந்து
மிகுத்த வாவியுங் கொடுப்பால் வேண்டுமுன் விரும்பி.

பிறருக்கு உதவி செய்யாதார் செல்வம் என்னும் என்பதைப் பற்றி ஒளவைப்பிராட்டியாரும் பிறரும் கூறுவதாவது :—

> பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
> பிறர்க்குதவி யாக்குபவர் பேராம்—பிறர்க்குதவி
> செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
> பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

துய்த்துக் கழியான் றுறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியு மடவோனே—வைத்த
பொருளு மவனை நகுமே புலகத்
தருளு மவனை நகும்.

மேலே கூறிய குமணவள்ளலும் கர்ணனும் ததீசி முனிவரும் உயிரைப் பிறர்க்கு உதவிபுரிந்து உலகில் அழியாப்புகழ் புண்ணியங்களைப் பெற்றதுடன் உதவியின் மாட்சியைச் செய்து மற்றவர்களும் உற்றுழி இவ்வாறு உயிரையும் உதவுதலே உதவியாமென வலியுறுத்திக் காட்டினார்கள். நாமென்ன செய்ய வேண்டுமென்பது சொல்லாமலே விளங்குகின்றது.

இனி எந்தெந்த அறத்துறைகளில் நிலை நின்றவர்கள் எவ்வகை உதவி செய்தல் வேண்டுமென்பதைப் பற்றிச் சிந்திக்கின் நல்லற நூல்களில் சொல்லறம் உலகில் இல்லறந் துறவறமெனச் சிறந்தன என்ற ஆன்றோர் வாக்கியத்தின்படி முன்னின்ற நன் மனைவாழ்க்கைக்கும் வாழ்க்கைத் துணையின் உதவி பெரிதும் வேண்டியதுடன் இல்வாழ்வானும் மனைவியின் துணையால் பற்பல நலமெய்துவதல்லது அம்மனைவாழ்க்கைத் துணை செய்யாதபோது ஒரு சிறிதும் செல்லாமையானும் நன்மனைவாழ்க்கை நடத்தவேண்டின் ஒருவர்க்கொருவர் உதவிசெய்தே நடைபெற வேண்டுமானபடியாலும் மனைவாழ்விலும் தலைவனுடைய குறிப்பறிந்து நடந்து இதம்பெற பல துறைகளிலும் பல கடமைகளை அவ்வக்காலங்களில் அவ்வவர்கட்குத் தக்கவாறு செய்யவேண்டிய அவசியமுடைமையாலும் அவைகள்தாமும் துறந்தார் இறந்தார் துவ்வாதார் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் என்னும் இன்னோரன்னார்க்கும் முன்னூட்டி உதவிபுரிய வேண்டியது முதன்மையான கடமையாததாலும் இதனையே பொய்யா மொழியார் முதலிய சான்றோர்கள் கூறுகின்றமையாலும் ஒருவர்க்கொருவர் உதவி செய்யவேண்டுவது அவசியமாகும். "நன்றூற்றலுள்ளுந் தவறுண்டு அவரவர் பண்பறிந்தாற்றாக் கடை" என்பது நோக்குக. இவ்விதம் நல்லறமான இல்லறம் நடாத்தும் இருவர் கருத்தும் ஒருமித்து ஆதாவுபட்ட நிலைநின்று செய்தார் செயற்

கருஞ் செயல்கள் பலவாகும். உதாரணமாக பெரிய புராணம் இளையான்குடிமாறநாயனர் சரித்திரத்தில் இறைவன் நள்ளிர வில் நல்விருந்தாக வந்த பொழுது இறைவன் அருளால் எய்திய இலம்பாட்டால் வருந்தியிருந்த தருணம் வந்த சிவனடியாருக் குத் திருவமுது செய்விக்கத் தகுந்த பொருள்கள் எதுவுந் தம் மிடத்து இல்லாமையை எண்ணி மிகவும் பசித்து வந்த இப் பெரியாருக்கு எவ்வாறு அமுதூட்டுவதென்று திகைப்புற்று அளவுபடாத அடியார்களுக்கு அன்னமிட்ட பெருந்தகை மையை உடையவரானபடியால் வருத்தத்தோடும் தனது மனைவி யாரைச் சந்தித்து நமக்கு முன்பிங் குணவில்லையாயினும் இமக் குலக் கொடிபாகற்கினியவர் தமக்கு இன்னமுது தகவுற அமைக்குமாற தெங்ஙனே அணங்கே யென்றார். அவ்வம்மையா ரும் இதனைக்கேட்டருளிப் பலவகையிலும் ஆராய்ந்து இன்று; வயலில் வித்திட்ட நெல்லை வாரிக்கொண்டு வந்தால் வல்லவாறு அமுதாக்கலும் ஆம் என்ற கருத்தைக் கூறியருளினர். அப் போது நாயனரும் சென்று கொண்டு வந்துதவிய சரிதம் யாவ ரும் நன்குணர்ந்ததேயாகும். இதுபோலவே ஒரு பெருந்தகை யார் மனைவியையும், மற்றொரு பெரியார் கோவணத்துடன் தன் குடும்பத்தையும் இன்னும் ஒருவர் தன் அருமைப் புதல்வனையும் பின்னும் ஒருவர் தன் ஆருயிரையும் தங்கள் கடமையாகச் செய்து வந்த நற்றொண்டுகள் முட்டுப்பாடடைந்த காலத்து மனமுவந்து ஆர்வத்துடனும் அன்புடனும் உண்மையுதவி செய் தமையாலே எல்லாம்வல்ல இறைவனும் செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஒலமென்றருளி மனத்தாலும் வாக்காலும் தவத் தாலும் காணற்கரிய கடவுள் முன் தோன்றி அன்னவர்கள் வீட் டில் சென்று அவர்கள் ஒருவருக்கொருவர் செய்த உதவியை மிகுதியும் பாராட்டி அவர்களுக்கு இம்மையில் புகழும் மறு மைப் பயனும் தந்தருளினர் என்பதை நமது திருத்தொண்டர் புராணம் வியந்து கூறுகின்றது. இம்மை மறுமைப் பயன் இரண் டும் இல்வாழ்வை நடத்தியதன் பயனக பெற்றருளிய கதைகள் எண்ணிறந்தனவாகும்.

இனி, இரண்டாவதான தவ வாழ்விலும் ஒருவர்க்

கொருவர் உதவி செய்தல் வேண்டுமா வேண்டாமா என்றால் வேண்டுமென்பதே ஏற்படும். தவவொழுக்கம் பெற ஒரு வர் விரும்புகின்ற நிலைவந்த பொழுது தவப் பெரியாரிடம் சென்று தொண்டு நன்று செய்து பலவகை நுட்பப்பொருள்க ளைக் கேட்டறிந்து அதன்படி நடந்து தவவாழ்வின் நலம்பெற வேண்டியவனாகின்றான். ஒருவர்க் கொருவர் உதவியில்லாத பொழுது அஞ்ஞான வசத்தனாக இருக்கிற ஒருவன் எவ்வாறு ஞானநெறி பெற இயலும்? மெய்ஞ்ஞான மூர்த்திகளைச் சென் றடைந்து மெய்ஞ்ஞான உபதேசங்களைப் பெற்று ஞானசாதன வகையில் முயலாதபோது ஒருசிறிதும் ஞானவானாக முடியவே முடியாது என்பது ஞானநூல்களின் துணிபாகும்; எனவே குழந்தைப் பருவந் தொடங்கி ஞானம் கைவரப் பெற்று, கற் றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாரா நெறி. மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவும் வரையும் ஒருவர்க் கொருவர் உதவி வேண்டியதாகவேயிருக்கும் என்பதே துணிபு.

---

## வரையறை

(கோவை. ம. இராமச்சந்திர செட்டியார், B.A.)

ஒரு பொருளை இன்னதுதான் என்றும் இன்னது அன்று யென்றும் முடிவுகட்டிச் சொல்வதை வரையறை என்பார்கள். அதனை ஆங்கிலத்தில் definition என்பார்கள். மேனாட்டுத் தத்துவ சாஸ்திரிகளும் கலைவல்லார்களும் இதனை அதிகமாகப் பாராட்டுவார்கள். ஆதியிலே கிரேக்க தேசத்திலே தத்துவ சாஸ்திரிகள் எதற்கும் வரையறையை ஆதாரமாகக் கொண்டார் கள். சாக்ரடீஸ் என்ற மகா தத்துவ சாஸ்திரி தம் வாழ்நாள் முழுவதும் வஸ்து தத்துவ நிர்ணயத்திலேயே செலவழித்தார். சந்திப்போர்க்கெல்லாம் கேள்விகள் மூலமாகப் பொருள்களின் உண்மையான நிலையை இன்னதுதான் என்றும் இன்னது அல்ல வென்றும் நிச்சயித்துக் காண்பிப்பார். அவர் உண்மை யென்ற பொருளின் தத்துவத்தை நிச்சயித்து உலகிற்கு எடுத்துக் காட்

டிய தத்துவமானது நமது நாட்டு மேதாவியான வள்ளுவப் பெருமானர் அருளின

"வாய்மை எனப்படுவதி யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்."

என்பதனையே வற்புறுத்துகின்றது. அங்கிபுனருக்குப் பின் வந்த யூக்லிடீசு என்ற கணித சாஸ்திரியும் கணிதத்திலே ஒவ்வொரு அளவையின் வரையறையையும் முதலில் எழுதினர். அதனை அடிப்படையாக வைத்துக் கொண்டே மற்ற உண்மைகளை வெளிப்படுத்தினர். இவ்விதமாகவே பின்வந்த பல மேனுட்டுத் தத்துவ சாஸ்திரிகளும் பொருள் நிச்சயத்தை முதல் முதலில் எந்நூலுக்கும் ஆதாரமாகவும் பாயிரமாகவும் கையாண்டு வந்தனர்.

நமது தமிழ் நாட்டிலோ திருக்குறளில் இதனையே முக்கியமாக அதனுசிரியர் கொண்டனர் என்பது அந்நூலைப் படித்தோர்கள் எடுத்தவுடனே அறிவார்கள். மேலும் இலக்கண நூல்களில் ஆசிரியர்கள் இந்தப் போக்கையே பெரிதும் ஆண்டிருக்கிறர்கள். தர்க்க சாஸ்திரங்களிலும் இதனையே வற்புறுத்துவார்கள். ஆனல் ஏனைய நூல்களில் இதனை அவ்வளவாக எடுத்தாண்டதாகத் தெரியவில்லை. அவ்விதம் எடுத்துச் சொல்லவேண்டிய அவசியமும் இல்லை; என்ருலும், புலவர் பெருமக்கள் தாம் இயற்றியுள்ள நூல்களிலே பல இடங்களிலே பொருள் நிர்ணயம் கூறியிருப்பதும் அறியலாகும். சாதாரணமாகத் தலபுராணங்களிலுங்கூட கதைகளைச் சொல்லும் போது பல அரிய பொருள்களை நிர்ணயம் கட்டி எடுத்துரைப்பதைக் காண்கிறேம். தலபுராணங்களைக் கட்டுக் கதைகள், எவற்றிற்கும் பயனற்றவைகள் என்று கருதும் மக்களும் அவைகளை ஆராய்ந்து பார்க்குமிடத்து அவற்றில் நல்ல பொருள்கள் புதைந்து கிடைத்தலைக் காணலாம். உயிர் நூல், பட்சி நூல், பிராணி நூல், தாவர நூல் முதலிய நூல்களில் மேனுட்டார்கள் தாம் உண்மையை அறிந்த நிபுணர்கள் என்று நாம் எண்ணிக் கொண்டிருக்கிறேம். நம் தமிழ்க் கருநாடகப் புலவர்களுக்கு

யாதொன்றும் தெரியாது என்று எண்ணிக் கொண்டிருக்கிறோம். புராணங்களை ஊன்றி வாசித்தவர்கள் இவ்வெண்ணம் தவறானது என்று அறிவார்கள்.

சைவ எல்லப்ப நாவலர் அருளின திருவிரிஞ்சைப் புராணத்தை சமீபத்தில் வாசித்தேன். அதில் அடியிற்கண்ட செய்யுள் இருக்கக் கண்டேன். அதன் பொருளையும் கவனித்தேன். அப்போது நான் அடைந்த வியப்பிற்கு அளவே இல்லாமற் போயிற்று. உயிர் நூல் பொருளில் இத்துணை ஆராய்ச்சி சிலருக்கு இருந்ததே என வியப்புற்று என் நண்பர்களுக்கு எடுத்துரைத்தேன். அதனை உலகோர்க்கு எடுத்துரைக்கும் பொருட்டே இதனை எழுதுகிறேன்.

அச் செய்யுட்களாவன—

மேலதாகவே தோன்றிடும் தருக்களின் விகற்பம்,
சாலு மானிடர் அதோமுகம் நிலையினுல் சனிப்பர்,
கோலமோ குறுக்காயெழும் விலங்குபுள் குலங்கள்,
தோலுறும் சேவிதுளைச் சேவியாம் உயிர்த்தொகுதி.

பிண்ட மீதினில் தோல்சேவி யுயிரெலாம் பிறக்கும்
அண்ட மீதினில் சனித்திடும் துளைச்சேவி யனைத்தும்
சண்டனுண் பெண் என்றுரைபெறு மூவகைத்தருக்கள்
எண்தகும் படிவயிர முள்ளன மற்றிலவும்.

இச்செய்யுட்களின் பொருள் வருமாறு—

“மரபேதங்களெல்லாம் மேல்நோக்கி ஊர்த்துவ முகமாக வளரும்; மானிடர்கள் கீழ்நோக்கி அதோமுகமாக சனிப்பார்கள்; மிருகங்களும் பட்சிகளும் பக்கப் பார்வையாகப் பிறக்கும்; இவ்வகை உள்ள உயிர் வருக்கங்கள் தோல் புறத்தில் தோன்றும் காதுகளை உடையவைகளும், தோல் புறத்தில் தோன்றுமல் துளை மாத்திரம் உள்ளதான காதுகளை உடையவைகளும் ஆக இருவகையாக இருக்கின்றன. தோல் காதுகளை உடைய உயிர்கள் எல்லாம் கருவில் பிண்டமாகத் தங்கி உதிப்பன. துளைக் காதுகளை உடைய உயிர்கள் எல்லாம் முட்டையில் தங்கிப் பிறக்கும். வயிரமுள்ள மரங்கள் ஆண் மரங்கள்

என்றும், வயிரமில்லாத மரங்கள் பெண் மரங்கள் என்றும் அலிகள் என்றும் மூன்று வகைப்படும்''

தற்காலத்தில் மேற்கில் கலைவல்லோர்கள் பொருள்களையும் பிராணிகளையும் வகுத்து வகுத்து பண்புகளை ஆராய்ந்து பிரிப்பதுபோல் நம் நாட்டிலும் முற்காலத்தில் பண்புகள் ஆராய்ந்து பிரித்து வந்தார்கள் என இதனால் தெரியலாகும். உயிருள்ள எல்லாப் பொருள்களையும் ஊர்த்துவமுகம், அதோமுகம், பக்கமுகம் என மூன்றாகப் பிரித்திருக்கிறார்கள். அவைகளில் அசையும் உயிர்த் தொகுதிகளைத் தோல்செவி, துளைச்செவி என இருவகுப்பாகவும், அசையாத தாவரங்களை ஆண் பெண் அலி என மூவகையாகவும் பிரித்திருக்கிறார்கள். அசையும் உயிர்த்தொகுதிகளில் தோல் செவி என்பவை தலைப்புறத்தில் வெளியில் நீண்டு தோலால் ஆகிய செவி உடைத்தாய் உள்ளவை என்பது பொருள். உதாரணமாக, மனிதன், யானை, சிங்கம், நாய், நரி முதலிய மிருகங்களும் வௌவால் துரிஞ்சில் முதலியவனவும். இவ்வகையான தோல் செவிப் பிராணிகள் பிண்ட வகையில் உதிக்கும். அதாவது பிறக்கும்போதே முழு உருவத்தோடு குட்டி போடுவன. துளைச்செவி என்பது வெளிப்புறத்தில் தோல் இல்லாமல் செவி ஒரே துளையாக இருப்பது; வெளிப்புறத்தில் செவியைக் காணமுடியாது. உதாரணம்: பறவைகள், பல்லி, ஓணான், பாம்பு முதலியன. இவைகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். ஆகவே 'தோல்காதுகளின் பண்பு குட்டி போடுவது; துளைக்காதுகளின் பண்பு முட்டை யிடுவது என்பது அறியலாகும். இத்தன்மைய பிரிவினை வேறு நாட்டார் அறிந்ததில்லை போலும்! மேலும் அசையாப் பொருள்களில் வயிரமுள்ளவை ஆண் என்றும் வயிர மில்லாதவை பெண் என்றும் கொள்ளப்பெற்றது. வயிரமுள்ளன: தேக்கு, மா, பலா முதலியவை. வயிரமில்லாதவை: மூங்கில், அருகு, கரும்பு முதலியன. வயிரம் உள்ளது உள்ளே கெட்டியாக இருக்கும்; வயிரமில்லாதது உள்ளே மெல்லியதாகவும் வெளியில் கெட்டியாகவும் இருக்கும். இவைகளுக்கு ஆண் பெண் என்று முறையே பெயரிட்டது வெளிப்படை. ஆகவே பொருள்களின் பண்புகள்

வகையிலும் அவைகளின் வரையறை வகையிலும் நமது முன்னோர்கள் எத்துணை கூர்ந்த ஆராய்ச்சியினை யுடையவர்களாயிருந்தார்கள் என்பதை இதனால் அறியலாம்.

நமது முன்னோர்களின் எண்ணப் போக்கிற்கும் மேனாட்டு நிபுணர்களின் எண்ணப் போக்கிற்கும் உள்ள ஏற்றத் தாழ்வுகளை இதனடியிற் கண்ட ஒரு உதாரணத்தினால் அறியலாம். மேனாட்டு நிபுணர்கள் 'பட்சி' என்பதனுடைய இலக்கணத்தை அடியிற் கண்டபடி நிர்ணயிக்கிறார்கள்.

1. பட்சி பறப்பது—வௌவால், கொசு இவைகளும் பறக்கும்; ஆனால் பட்சி அல்ல. ஆகவே இப்பண்பு சரியன்று. மேலும் நெருப்புக்கோழி பறப்பதில்லை; ஆனால் பட்சி ஆகும்.

2. பட்சி முட்டை இடும்—பாம்பு, பல்லி முட்டையிடும்; அவை பட்சி அல்ல. ஆகவே இக்குணம் சரியன்று.

3. பட்சி, அலகு மூக்கு கொண்டது. எறும்பு தின்னி, கத்திமீன் முதலிய அபூர்வ ஜந்துக்கள் அலகு கொண்டிருக்கும். ஆகவே இதுவும் சரியன்று.

ஆகவே, இவைகளெல்லாம் ஆராய்ந்து ஒன்று சேர்த்துக் கூறுமிடத்து ஒருபட்சியினுடைய பண்புகள் ஏற்படும் என்பார்கள். உதாரணமாக பட்சி சிறகுகள் கொண்டதும் முட்டையிடுவதும் அலகுமூக்கு கொண்டதும் ஆன ஒரு பிராணி எனலாம். ஆராய்ந்து பார்த்தால் இம்மூன்றும் கொண்டதே ஒரு பட்சியாகும் என்பதைக் கவனிக்கலாம். இவ்வகையாக ஒரு பொருளின் பண்புகளை மேனாட்டவர்கள் ஆராய்ந்து வந்தார்கள்.

இந்த ஆராய்ச்சிக்கும் நமது முன்னோர்கள் கொண்ட கொள்கையான தோல் செவி என்பதற்கும் உள்ள தாரதம்மியம் கவனியுங்கள். நமது முன்னோர்களின் கொள்கை எவ்வளவு எளிதாகவும் மனதில் படும்படியாகவும் இருப்பதென்பதை ஆராயுங்கள். நமது புராணங்களில் ஆங்காங்கே இவ்வித அற்புத ஆராய்ச்சிகளை நுழைத்திருப்பதை நாம் அறிவதில்லை. அவற்றை எடுத்தெழுதுவது நமது கடமை ஆகுமல்லவா?

---

# செல்வமும் அதன் பயனும்

(திருவையாறு தி. அ. சித. சிதம்பர சுவாமிகள்)

இவ்விரண்டனுள் முன்னதை முன்னுய்வாம். செல்வம் எனப் பலவுளவேனும் செல்வம், செல்வர் என்ற அளவில் பொருளையும் பொருளுடையாரையுமே உலகினர் குறிக்கின்றனர். மற்றைய அருட்செல்வம் கல்விச் செல்வம் செவிச் செல்வம் தவச் செல்வம் மக்கட் செல்வம் என அடைகொடுத்தோதப் படுகின்றன. அங்ஙன மடைகொடுத்தோதிய விடத்தே யவை தனித்தனி யறியப்படுகின்றன. இச் செல்வம் பிற செல்வங்களோடு இணைத்துக் கூறுமிடத்து அடைகொடுத்தோதப் பெறுமன்றித் தனித்துக் கூறுமிடத் தடைகொடுத்தோதப் பெருதென்க. இதுவேயோ? இதன் பரியாயமான பொருளென்பது மடைகொடுத்தோதப் பெருதென்க. வழக்கினும் நூலினு மிங்ஙனமே வரல் காணலாம். இங்குத் திருக்கோவையார் முதற் பாவும் பேராசிரியர் விளக்கவுரைப் பகுதியும் நினைவிற்கு வருகின்றன.

திருவளர் தாமரை சீர்வளர் காவிகளீசர் தில்லைக்
குருவளர் பூங்குமிழ்கோங்கு பைங்காந்தள் கொண்டோங்கு தெய்வ
மருவளர் மாலையொர்வல்லியி னெல்கியன நடைவாய்ந்
தருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே.

இவ்வருமந்த பாவிற்கு எழுதிய விரிவுரையில் "கோங்கென இதனை யொழிந்த நான்கிற்கு மடைகொடுத்து இதற்கடை கொடாதது, பாலைக்கு நிலஞ் சொல்லுதனோக்கி. என்னை? பாலைக்கு நிலமின்றாகலான். ஆயின் மற்றைய நிலம்போலப் பாலைக்கு நிலமின்மையாற் கூறினாராகின்றார். மகளிர்க் குறுப்பிற் சிறந்த வுறுப்பாகிய முலைக் குவமையாகப் புணர்க்கப்பட்ட கோங்கிற்கு அடை கொடுக்கக் கடவதன்றோ எனின், அடை கொடுப்பின் பிறவுறுப்புக்களையு மிதனோடொப்பித்ததாம். ஆகலான் இதற்கடை கொடாமையே முலைக்கேற்றத்தை விளக்கி நின்றது. அஃது முற்கூறிய வகையில், திருக்கோயில், திரு

வாயில், திருவலகு என்றவற்றிற்கு நாயகராகிய நாயனுரைத் திருநாயனர் என்ஞததுபோல வென்க" என எழுதி யுள்ளார்.

இங்ஙனமே செல்வமென அடைபெருது வழங்குதலே அதன் ஏற்றத்தை விளக்குகின்ற தென்னலாம்.

பொருட் செல்வமின்றேல் மற்றைய செல்வமெல்லாங் கிட்டாவென்பது வெள்ளிடை மலே.

செல்வமெனினும் பொருளெனினும் திருவெனினும் திரவியமெனினும் ஒருபொருள் குறித்தன எனக் கூறலாம். இவற்றுள் திரவியமென்பது வடமொழி.

ஒவ்வொரு சொல்லுந் தனித்தனி வெவ்வேறு காரணத்தானியன்றதேனும் உணர்த்தும் பொருள்வகையான் (அடைகொளியால்) ஒற்றுமை யுடையவாயின வென்க.

பொருட் செல்வமென இருபெயரொட்டாய் வருதல் காண்க. 'அற்காவியல் பிற்றுச்செல்வம்' 'செல்வர்க்கே செல்வந் தகைத்து' 'அவைக்குழாத்தற்றே பெருஞ்செல்வம்' இடைநடுவிற் குறிக்கு மிச்செல்வம்' 'பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லதில்லே பொருள்' 'பெற்ருன் பொருள் வைப்புழி' 'பொருளென்னுஞ் செல்வச் செவிலியால்' 'பொருள் செய்வார்க்கு மஃதிடம்' திருவினேத் தீராமையார்க்குங்கயிறு' 'கல்லார்கட்பட்ட திரு' என ஒரு பொருளென வெனக் கொள்ளுமாறு பெரும்புலவர் வழங்கி யிருத்தல் காண்க.

செல்வம் என்னுஞ் சொல்லேக் குறிக்குங் காலத்துச் செல்லுதலேயுடைய தென்னும் பொருட்கண் நிகழ்வதாகக் காணப்படுகின்றது.

'செல்' என்னு முதனிலேயும் 'அம்' என்னும் இறுதி நிலேயும் பெற்றிலகு மொழியெனக் கூறலாம்.

இதனே 'அற்காவியல் பிற்றுச் செல்வம்' 'கூத்தாட்டவைக் குழாத்தற்றே பெருஞ் செல்வம் போக்குமது விளிந்தற்று" "திருவினேத் தீராமை யார்க்குங் கயிறு" என்பன வலியுறுத்து மென்பதொருதலே.

இஃது இந்நீர்மையதென்று கண்டு வெறுக்கைகொள இலக்காவதன்று. வெறுக்கின் உடலின்கணுயிர் உறைதலை வெறுக்கின்றவனாவான்.

முன்னரீட்டியது போகஊழாற் போயினும் பின்னரீட்டுவது துணைபுரியும். அழியுமெனப் பொருணோக்காளர் பொருட்பயனறிந்தவர் பின்னடையார். பயனறியாதாரே பின்னடைவார். பின்னடையின் பெறும் ஏதம் பெரிதாமென்க. தற்காலத்தில் நந்தண்டமிழ் நாட்டில் நாட்டுக்கோட்டையார் என்னும் வணிகப் பிரிவினர் பொருட்பயனை நன்றாகத் தெரிந்தமையான் எந்நாளும் எந்நேரமும் பொருளீட்டலிலேயே கண்ணுங் கருத்துமாக விருக்கின்றனர். முன்னீட்டியது ஒழியினும் தளராது பின்னுமீட்டுகின்றனர்.

பிணத்தையே வருமுலகில் விழையார். காணாது சேய்மையிற் செல்வர். அதுபோலப் பணமில்லானையும் ஒருவரும் விழையார். காணாதகல்வர். அதுவேயன்றித் துன்புறுந் துவ்வாமை வந்தணுகுவதால் நெருப்பினுங் கொடிய நிரப்பினுட் டங்கவியலாம லின்னலே வடிவா யிறந்தொழிவர். இதனாலன்றோ பணமில்லான் பிணமென மூதுரை மொழியப்பட்டது?

ஆகையால் எத்தொழிலைச் செய்தேனும் என்னவின்னலுற்றேனும் பொருளீட்டல் வேண்டும்.

எத்தொழிலுமென்றதனால் தீயதொழில் கொள்ளப்படாதென்க. வறியனொருவன் பொருளுடையான் வேடங் கொள்ளினுமவனை யறியாத இடத்திலேனு மதிக்கின்றனர்.

கூத்தில் பெருஞ்செல்வன் ஏழைவேடந்தரிக்கின் அவன் ஏழையாகவே யங்குக் காணப்பட்டு இகழப்படுகின்றான். குசேலவேடம் போட்ட செல்வனை வாயிலான் வேடங்கொண்ட வறுமையாளன் மதிக்கின்றானா?

ஆதலான்

இன்னாரும் பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—யன்ன
தளித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பால்
இழத்தலுந் துன்பமே யாம்

எனச் சோம்பேறி ஞானம் பேசலாகாது. பொருளுடையார் தளர்வடையார். இல்லாரை எல்லாரு மெள்ளுவர். பொருளு டையாரைப் பகைவருஞ் சிறப்பிப்பர். பகைவரஞ்சுவது பொரு ளொன்றுக்கன்றிப் பிறவற்றிற்கன்று. மிக்க வுடல்வலி யுள்ள வனையும் பொருள் வென்று விடும்.

'பேணுரைத் தெறுதலும்' 'ஒன்னார்த் தெறுதலுமுவந் தாரை யாக்கலும் தற்செய்வான் சென்றார்த்தருஉந்தளரிய லாய்' எனவருஞ் சங்கச் சான்றோர் மொழியதனை வலியுறித்து மென்க.

நற்குடியிற் பிறந்தவனாயினும் நல்லொழுக்க முள்ளவனாயி னும் அவனை யெவருமதியார். அவையெல்லா மில்லாது பொரு ளொன்று முளனாயின் அவனை நடுப்பந்தியிலிருத்துவர். நற் குடியிற் பிறந்தோரு நல்லொழுக்கமுள்ளாரு மென்பது கண் கூடு.

'முனிவரு மன்னரும் முன்னுவ பொன்னான் முடியும்' என விழைவு விடுத்த விழுமியோராகிய மணிவாசகப் பெருந் தகையாரும்,

பொன்னினாகும் பொருபடையப் படை
தன்னினாகுந் தரணி தரணியிற்
பின்னையாகும் பெரும் பொருளப்பொருள்
துன்னுங் காலத்துன்னுதன வில்லையே

என அத்தகைய திருத்தக்க மாமுனியும் கூறுவாராயின் விழை விடுக்கா மேதினியோர்க்குப் பொருளின்றியமையாதது எனச் சொல்லவும் வேண்டுமோ? வேண்டாமென்ப தறிவுடையார் கொள்கையாகாது.

மணிவாசகப் பெருந்தகையாரைப் பாண்டியன் பொரு ளன்றோ பரமனைக் குருந்தடியிற் காணப் புரிந்தது? பல பிள்ளை களைப் பெற்ற தாயும், பொருளுண்டைய பிள்ளையையே, மேவுகின் றாள்; பொருளற்றவனை வெறுக்கின்றாள். எட்டியுஞ் சுட்டி யுங் காட்டப்படும் குல இழிவு பெற்றோனாயினும், அவன் விரும் பாது வெறுக்கினும், பொருளுடையானாயின், எம்மவன் என

எவரும் வலியச் சேருகின்றனர். இருந்த பொருளகலின், நற்குலத்துக் கிளையாளனையும் பழமற்ற மரத்தைப் பக்கிகளகல்வது போல் அகல்கின்றனர்; வெறுக்கின்றனர்; பழிக்கின்றனர். பெற்ற பிள்ளையும் பொருளில்லாத் தந்தையை வெறுக்கின்றான். பெண்டிர் புறக்கணிக்கின்றனர்.

பொருளுடையான் இல்லிற்கு வரும் பெண்கள் அடங்கி நடக்கின்றனர். இல்லான் வீட்டிற்குச் செல்பவள் அவனை அவமதிக்கின்றாள்.

புலவர் பாடத்தொடங்கினால்,

"உடுப்போர்க்குடுக்குந் துகில்களா லுண்போர்க்குண்ணும் [பொருள்களால்
தொடுப்போர்க் கெடுக்கு மலர்களாலணி வோர்க்கணியுஞ் [சுடரிழையால்
அடுப்போர்க்கடுக்கு மனைகளாற் குறைபாடுடைய தன்றதுதான்
கொடுப்போர்க் கிரப்போரிலாத குறைவொன்றுண்டது கூறுங்கால்.

எனப் பாடுகின்றனரன்றி வறுமை மிகுந்த வூரென்றாவது, நாடென்றாவது பாடுவதில்லை.

ஒருவன் ஒரு ஊருக்குச் சென்றால் அங்குச் சென்றவுடனிவ்வூரில் எவ்வளவினர் செல்வருளர் என வினவுவானன்றி மற்றையர் எவ்வளவினர் என வினவான்.

நற்பொருளெனவும், கேடில் விழுச் செல்வம் எனவும், புகழப்படுங் கல்விச் செல்வம் பெற்றவரைத்தான் எவருங் கொண்டாடுகின்றனரா? கல்விச் செல்வம் பெறுவதற்குத்தான் பொருளில்லாது போனால் முடியுமா? கற்றவர், செல்வரையல்லவா பாடுகின்றனர். புறநானூறு பெரும்பாலும் செல்வவான்கள் சரிதமல்லவா? ஏழையரைப் பாடுவாரிலையே; ஒருவரையும் பாடுவதில்லை யென்று நோன்பு கொண்ட பொய்யாமொழிப் புலவர் தஞ்சைவாணனைப் பாடி பரிசு பெறவில்லையா? செல்வர்கள் இல்லாது போனால் புலவர் வாயமுத மொழியை யாங் கண்டு மகிழ முடியுமா? தமிழ்ச் சுவை பெறுவேமா? சங்கந் தோன்றியிருக்குமா? திருஞான சம்பந்தப் பெருமான் முதலிய பெரி

யார்கள் தங்களாற்றலுக்குத் தக்கவாறு 'காசு' நல்குவீர் எனப் பாடி, இறைவன்பால் பொருள் பெற்றனராயின், அதனினின் றியமையாமையை யுணர்த்தவும் வேண்டுமா? "அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ் செல்வச் செவிலியானுண்டு" என்பது பொய்யா மொழியல்லவா? அருள் வளரவும், பொருள் வளரல்வேண்டும். ஏனைய செல்வத்திற்கும் அங்ஙனமேயாதலின் பொருளீட்டலிற் பெருநோக்கங் கொள்ளத் தக்கது.

"திரைகட லோடியுந் திரவியந் தேடு"

என்னும் ஔவையார்திருவாக்கையும் மறவற்க.

இஃதறவழி வந்ததும் அஃதல்வழி வந்ததுமென விரு வகையாகின்றது.

அறவழி வந்ததே இம்மையினும் இன்பம் பயந்து மறு மைக்கும் ஏமாப்புடையதாகும்.

அல்வழிவந்தது இருமையினும் இன்னல் பயக்குமென்ப தொருதலை. அல்வழியான் வந்தது விரைந்தழிவதோடு முன் னுள்ளதையும் சிறிதுமின்றிச் சேர வீர்த்துச் செல்லும்.

மறவழியான் வந்ததை யீயினும் பாவந் தனக்கு ஆகப் புண்ணியம் பொருளுடையானுக்குச் செல்லுதலன்றியும், தனக்கு மக்கட்பேறு மின்றாகும் என வள்ளுவர் வாய்மொழி யாலறிகின்றனம்.

"படைப்புப் பல படைத்துப் பல்லாரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வராயினு மிடைபடக்
'குறு குறு நடந்து சிறுகை நீட்டி,
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடையடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களையில் லோர்க்குப்
பயக்குறையில்லை தாம் வாழுநாளே."

"பொன்னுடையரேனும் புகழுடையரேனுமற்
றென்னுடையரேனு முடையரோ—வின்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லாதவர்."

எனப் பாண்டியன் அறிவுடை நம்பியும், புகழேந்திப் புலவரும், கூறியவற்றாலும், பிறவற்றாலும், இம்மைப் பேற்றினுட் சிறந்த தென்று அறியப்படு மக்கட்பேற்றை யிலதாக்குகின்ற, மற வழிப் பொருளை மனிதனாகப் பிறந்தவன் விரும்பலாமா? விரும்பலொண்ணாதென்க.

ஆகையால் நண்பர்களே, மறங்கடிந்தே பொருளீட்டல் வேண்டும் அதுவே எப்பேற்றையு மளிக்கும்.

பல தொழிலால் பொருளீட்டலாமெனினும், நெசவு, வாணிபம், உழவு, வரைவு முதலியனவே சிறந்தனவாகும். இவற் றான் எய்தும் பொருளே சிறந்ததாகும். இவற்றுள்ளும், உழவுத் தொழிலான் வருவதே மிகச் சிறந்ததாகும். இதுவே யடிமை நீக்குவதாகும். அறச் செல்வமுமாகும். உழவுத் தொழிலில் லாது போனால், மன்னரெங்கே; மாடமெங்கே; கூடமெஙகே? நாடாட்சி நிகழுமா? சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலா தன், இல்லாது போனால், பாரதப் போர் செவ்வனிகழ்ந்திருக் குமா. பசியே கொன்றொழித்திராதா? அவன்றான் உழவுத் தொழிலிலையாயின் இப்பெரும் புகழ்ச் செய்கை செய்ய முடி யுமா?

உண்டி கொடுத்துயிர் கொடுப்பதுழவுத் தொழிலன்றோ? உலகு ஏருடையாரை நோக்கியன்றே வாழ்கின்றது? இதனை யறியாதார், தமக்குரிய உழவுத்தொழிலை விடுத்து, தொழவுத் தொழிலை யினிதெனக் கருதி இருக்கும் பொருளையு மிழக்கின் றனர்.

நம் நாட்டில் உழுதூண் கொள்வார் பலரே, தொழுதூண் கொள்வார் சிலரே யென்னலாம். இக்காலத்துத் தொழுதுண்டு வாழ்தலே சிறந்ததாகும் எனக் கருத்துக்கொள்வதன்றியும் உழுதுண்டு வாழ்வாரையு மிகழ்கின்றனர். அஃதறியாமைச் செயலாகும். தொழுவார்க்குச் சுகம்பெற முடியுமா அவர் செல்வம் பெற முடியுமா? பெறினும் மானமுடையார் சீர் செய் வரா? உழுது வாழ்வார் செல்வம் பெறுவர். பெருகவும் பெறு வர், எவருமதிப்பர். இதனாலன்றோ நம்மன்னையாரும் ‘தொழு

தூண் சுவையினுமுடி தூணினிது' எனவும் 'மேழிச்செல்வம் கோழைபடாது' எனவும் உமாபதி சிவாசாரிய மூர்த்திகள்,

*காராள ரணிவயலி லுழுது தங்கள்கையார நட்டமுடி திருந்தி லிந்தப், பாராளும் திறலரசர் கவித்த வெற்றிப் பசும்பொன்மணி முடி திருந்தும் கலப்பை பூண்ட, வேராமலன் டிசைவளர்க்கும் புகழ் வேளாள ரேரடிக்கும் சிறுகோலாற் றரணி யாளச், சீராரு முடியரச ரிருந்து செங்கோல் செலுத்துவர்வே ளாளர் புகழ் செப்பலாமோ*

எனவுங் கூறுவாராயினர் ?

கற்றதனுல், தமக்குரிய நெசவு, வரைவு, உழவு முதலியன வெறுக்கத் தகுந்தனவல்ல. கற்ற புலவர்கள் உழவு முதலிய தொழிலை புறக்கணித்தாரிலை முற்காலத்தென 'ஓரேருழவர்' மருத்துவந் தாமோதரனுர், கூலவாணிகஞ் சாத்தனுர் என வரும் பெயர்களானே யறியலாம்.

ஆங்கிலர் தொழுதுண்டு வாழ்வாரைச் செல்வராயினு மதியார்; வேறு தொழிலான் வாழ்வாரையே, செல்வம் பெரிதிலையே னும் மதிக்கின்றனர்.

இத்தகைய செல்வத்தைக் காலம்பெற வீட்டல் வேண்டும். அழிவதும், ஆவதும், ஆகிப் பின் பயக்கு மூதியத்தையும் தெளிந்து எத்தொழிலினு மிரங்கல் வேண்டும். பெரு முயற்சியான் சிறுபயன் பெறும் தொழிலைச் செய்யலாகாது. சிறு முயற்சியான் பெரும்பயன் எய்துந் தொழிலையே செய்தல் தகும். இங்ஙன முள்ளானுக்கே யாக்கம் பெருகும். ஆக்கங் கருதி முதலிழக்குந் தகைமையோனுக் கெங்ஙனம் பெருகும்?

செலவிடுங்கால் கணக்குப் பார்த்தே செலவிடல் வேண்டும். கணக்குப் பாராது செலவு செய்வானுயின் விரைந் தழியும். செலவிடல் சிறிதாயினும் கணக்கெழுதல் வேண்டும். சிறிது, பெருக்கைத், தெரியாமலே தொலைப்பதாகும். ஒரு பாத்திரத்தில் உள்ள நீர் சிறு துவாரத்தின் வழிச் சிறி தாகச் செல்லுமாயினும் சற்று நேரங்கடந்து பார்க்கும் போது வெறும் பாத்திரமாகவே காணப்படும். அதுபோல சிறிதென்று நோக்கிக் கணக்கெழுதாம லிருந்தால் 'ஆயிர

மாகாணி யறுபத்திரண்டரை, யாவதுபோல அழிவது தெரியா மல் அழிந்துபோகும். கணக்கெழுதிச் செலவிடுவானுயின் வீண் செலவெல்லாஞ் சுருக்க நேரிடும். நியாயச் செலவு மதிகப்படாது.

செலவிடுங்கால் வருவாய்க்குத் தக்கவாறுஞ் செலவிடல் வேண்டும். வருவாய்க்கு அதிகமாகச் செலவிடின் உளபோலத் தோன்றி யில்லாதொழியும் என்பதொருதலை.

"ஆகாறள விட்டிதாயினும் கேடில்லைப்
போகாற கலாக்கடை"

"அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்ருக் கெடும்"

எனவரு மறைகளானு மறிக.

செல்வர்கள் பரம்பரையாகத் தங்கள் குடும்பத்தில் வேலை பார்த்துவரும், மரபினரை நீக்கிப் புதிதாகப் பிறரைச் சேர்த்த லாகாது; சேர்ப்பின் நன்மையை விளைவிப்பாரென ஒருதலையாக அறியவியலாது. மரபொடு வந்தோர் தீங்கு செய்ய நினைப்பி னும் பின் பிழையெனத் தவிர்வார் ஆகையால் மரபொடு வந்த வரை, நெடுங்கால முள்ளவரைக் காரணங்கருதாது விலக்க லாகாது.

கட்டியங் காரனைப்போல்வாரு முளராதலின் வேலைக் காரரை கண்காணியாதிருத்தல் ஆகாது. இருப்பின் ஓடேந்தச் செய்து விடுவர்.

செல்வர்க்குப் பணிவு வாய்க்கின் அஃது பெற்ற செல்வத் தோடு வேறு மொருபெருஞ் செல்வம் வந்தாற் போலாகும்.

(தொடரும்)



கோவை, திருவாளர்
C. M. ராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள், B.A., B.L.